மானிட மாணிக்கம்

# ஜவாஹர்லால் நேரு



இயற்றியவர் :

M. S. சுப்பிரமணிய ஐயர்




வெளியிடுவோர் :

...ப்புக் கழகம்

... : சென்னை—1

[விலை ரூ. 1

# பொருளடக்கம்

## மானிட மாணிக்கம்

# ஜவாஹர்லால் நேரு

## 1. முன்னுரை

"உடல் எடுத்தால், 'ஊருக்கு நல்லவன்' என்று உயர் புகழ் பெறுதல் வேண்டும்; அன்றேல், 'இரண சூர வீரன் இவன்!' என்று எத்திசையும் மெச்சும்படி வாழ்தல் வேண்டும்; அல்லது, இல்லை என்னுமல் எந்நாளும் வழங்கும் வள்ளலாய் விளங்குதல் வேண்டும்,'' என்று குமரேச சதகம் கூறும்.

பண்டித ஜவாஹரை 'மனித குலத்தின் மாணிக்கம்' என்ருர் மகாத்துமா காந்தி; மேலும், 'துணிவு, தேசபத்தி இவற்றில் அவரை விஞ்சுவார் யார்? போர் வீரனுக்கு உரிய வீர தீரமும், ராஜதந்திரிக்கு ஏற்ற ஆழ்ந்து அகன்ற அறிவும், படிகத்தைப் போன்ற தூய்மையும் வாய்ந்தவர் அவரே!'' என்றும் மனமார மொழிந்திருக்கிருர்.

அத்தகைய ஜவாஹரின் உள்ளப் பூரிப்பு யாது? "இந்தியாவுக்காக உழைக்க நான் பேறு பெற்றது பற்றி மிகவும் பூரிக்கின்றேன்! பிரியமான பாரத பூமிக்காக வருந்தி வாடுதல் இன்னும் பெரிய பேருகும்! சுதந்தர இலட்சியத்தை முன்னிட்டு, உயிரை வழங்குவதினும் உயரிய பேறு ஒன்றுண்டோ?'' என்கிருர் பண்டித ஜவாஹர்.

ஒரு சமயம், ஏழை உழவரின் நிலையை ஜவாஹர் அறிய வந்தார்; உடனே, அவர் கரைந்துருகிக் கூறியது இது:

"உடலின் மானத்தை மூடிக்கொள்ளவும் வகையின்றித் திரிகின்ற கணக்கிலா மக்களின் நிலையை நான் மறந்து சுகவாசியெனச் சும்மா இருந்ததைக் கண்டு என் உள்ளம் நாணுகின்றது! ஏழை துயர் துடையாத வாழ்வும் ஒருவாழ்வாமோ?"

கங்கையும் யமுனையும் கூடுமிடத்திலே, பன்னீராண்டுக்கு ஒரு முறை 'கும்பமேளா' என்னும் நீராட்டு விழா நடைபெறும். அப்போது, இலட்சக் கணக்கான மக்கள் அங்கே சென்று நீராடுவார்கள். ஆடும் துறைக்குப் போகும் வழியில் ஜன நெருக்கமும் சந்தடியும் சொல்ல முடியா! அவற்றைச் சமன் செய்ய அதிகாரிகள் முயலுவதுண்டு.

நீராடுவார் அனைவருக்கும் உரிய உதவியெல்லாம் தேடித்தருவார் பண்டித மதன் மோகன் மாளவியா; உடனிருந்தும் ஊழியம் புரிவார். ஒரு சமயம், "நதியிலே வெள்ளம் அதிகம்; ஓட்டம் தாங்க முடியவில்லை; ஆதலின், ஒருவரும் நீராடக் கூடாது," என்று அதிகாரிகள் கூறி, குறுக்கே மர வேலி இட்டுவிட்டார்கள்.

அப்போது ஆயிரம் ஆயிரமாக மக்கள் தடுக்கப்பட்டு நிற்பதை ஜவாஹர் பார்த்தார்; சத்தியாக்கிரகம் செய்யப்போவதாக மாளவியா கூறியதையும் உணர்ந்தார்; ஆள் உயரம் மரவேலி இட்டிருப்பதையும், அருகே போலீஸார் காவல் புரிவதையும் நோக்கினர்; நீராடத் துடித்து நிற்கும் மக்களின் மனநிலையையும் மதித்தறிந்தார்.

அவ்வளவுதான்! மூச்சை அடக்கி, மேலே கிளம்பி, ஒரே தாண்டில் வேலிக்கு அப்பாற் குதித்தார்; நதிக்கரை குறுகி நீராடித் திரும்பினர்; மரவேலியின்மீது தேசியக் கொடியும் நாட்டினர். தடுத்து நிறுத்திஞல், தாண்டிக் குதிக்கும் தன்மை மிகுந்தவர் அவர்.

1918-ஆம் ஆண்டு, இலட்சுமணபுரி என்னும் நகரிலே ஐக்கிய மாகாண அரசியல் மகாநாடு நடைபெறுகிறது. மாகாணத்தின் இணையற்ற தலைவர் பண்டித மோதிலால் நேரு, அவைத் தலைமை தாங்குகிறார். அவரது அரிய சொற்பொழிவை எல்லாரும் காது கொடுத்துக் கருத்துடன் கேட்கின்றனர். ஜனக் கூட்டம் மிக அதிகம்.

"ஆங்கில ஆட்சியின் போக்கைக் கண்டு அலமருகின்றேன்! ஏமாற்றம் அடைகின்றேன்! ஆனாலும், ஆங்கிலேயரிடம் எனக்கு நம்பிக்கை அதிகம். நீங்களும் அவ்வாறே நம்பியிருத்தல் வேண்டும்," என்று மோதிலால் மொழிந்ததும், "அதனை யான் மறுக்கிறேன்!" என்று ஒரு குரல் எழுந்தது. சபையார் திடுக்குற்றனர்.

'அங்ஙனம் கூறியவர் யார்?' என்று சினந்தார் பண்டித மோதிலால். மீண்டும், 'அதனை யான் மறுக்கிறேன்!' என்னும் குரல் கம்பீரமாய் எழுந்தது. 'அப்படியா? மறுக்கிற பேர்வழி முன்னே வரட்டும், பார்க்கலாம்!' என்று மோதிலால் கர்ஜித்தார். 'நான்தான்,' என்று சற்றே எழுந்து உட்கார்ந்தார் ஓர் இளைஞர்.

உடனே அந்த இளைஞரின் பக்கம் அனைவரும் திரும்பிப் பார்த்தனர். அவருக்கு அப்போது வயது பதினெட்டுதான் இருக்கும். 'மூதறிஞரான

தந்தையாரைத் தட்டிப் பேசுகிருனே இந்த இள மகன்!' என்று எல்லாரும் ஆச்சரியம் அடைந் தனர்; உடையும் தோற்றமுங் கண்டு மலைத்தனர். அந்த இளமகனர் பண்டித மோதிலாலின் வீரப் புதல்வரே.

விளையும் பயிர் முளையிலேயே விளங்கும் அல்லவா? இந்தியாவுக்கு வாழ்வளிக்க வந்தவர் அவ்வீரப் புதல்வர். பண்டித ஜவாஹர்லால் நேரு என்பர் அவரை. வடநாட்டிலே வேதியரைப் பண்டிதர் என்று வழங்குதல் மரபு.

அவ்வீர மகனரது வாழ்க்கை வரலாற்றை அடுத்த அதிகாரங்களிற்பார்ப்போம்.

## 2. முன்னேர் மாண்பு

பரத கண்டத்தின் வடமேற்கோடியிலே, மலை நாடு ஒன்றுண்டு. அங்கே எங்கும் நெடிய சோலைகள், இனிய மலர் வனங்கள், தெள்ளிய ஓடைகள், வெள்ளிய பாறைகள், வர்ணச் செடி கொடிகள், ஓங்கிய குன்றுகள், ஆழ்ந்த பள்ளத் தாக்குகள் இவை மிகுதி.

அந்நாட்டின் பூங்காவிலே, பழச்சோலையிலே, வளைந்தோடும் அருவிக்கரையிலே, அருவிமீதுள்ள படகு மாளிகையிலே புகுந்து, அந்தமாக வீசும் மந்த மாருதத்தை நுகர்ந்தால், யாரும் தம்மை மறக்க நேரும்! தனியின்பம் எய்திக் களிக்கலாம்! ஆதலின், அதனைப் போக பூமி என்று புகழ்ந்தான் மொகலாய மன்னருள் ஒருவனுன ஜஹாங்கீர்.

மன்னர் பலர் ஆண்டுதோறும் ஆறு மாதத் துக்கு அதிகமாக அக்காஷ்மீர் நாட்டில் விரும்பி

வசிப்பது வழக்கம். இளவேனில், முதுவேனில், முன் பனி, பின் பனி, கார், கூதிர் என்னும் ஆறு பருவங்களுக்கும் ஏற்றவையான ஆறு அரண்மனைகளை அன்னோர் அவ்விடத்தே அமைத்து மகிழ்ந்திருந்தனர். அந்நாட்டிற்கு ஈடான சுகவாச நாடு உலகிலே எங்கும் காணக் கிடையாது!

பல்லாண்டுகளுக்கு முன், அந்நாட்டிலே ராஜ கௌல் என்னும் பெரியாரொருவர் வசித்துவந்தார். வடமொழியிலும், பாரசீக பாஷையிலும் அவர் ஒரு பெரும்புலவர். டில்லிமா நகரிலே அவுரங்கசீபுக்குப் பின் அரியணை ஏறிய பருக்ஸியர் என்பான், அவரது புலமை கண்டு மோகங் கொண்டான்; டில்லிக்கு வந்து வசிக்குமாறு அவரை விரும்பி அழைத்தான்.

'கொற்றவன் அறிதல் உற்றிடத்து உதவி,' அல்லவா? ராஜ கௌளும் டில்லி சேர்ந்து, ஆஸ்தானக் கவிஞராகி, அரிய சிறப்புப் பலவும் அடைந்தார்; நதியோரத்திலே வாழ்ந்தமையால் 'நேரு' என்று வழங்கப் பெற்றார். நாளடைவிலே அவ்வரசர் பலரும் தம் வாழ்வும் வரிசையும் இழந்து நின்றாலும், பெயரளவிலே பாரத பூமியின் சக்கரவர்த்திகளாய்த் துலங்கினர்.

நம் பண்டித ஜவாஹர்லால் நேருவின் பூட்டனாரான இலட்சுமி நாராயண நேரு என்பார், அச் சக்கரவர்த்திகளின் சபையிலே 'சர்க்கார் கும்பினி' யின் முதல் வழக்கறிஞர் (பிரதிநிதி) ஆனார். பாட்டனாரான கங்காதர நேருவோ, அந்த டில்லி நகரின் கோத்தவால் ஆகிக் குலவி நின்றார். கொத்தவால் என்பவர், நகரப் போலீஸ் அதிகாரிகளுள் முதல்வர். இப்போது சென்னை நகரிலுள்ள ஷேரீப்புப் பதவி போன்ற பதவி அது.

அவ்விதமிருக்கையில் 1857-ஆம் ஆண்டிலே சிப்பாய் கலகம் எனப்படும் முதல் சுதந்தரப்போர் அங்கே மூண்டது. மூளவே, டில்லி நகர மாந்தர் அனைவரும் தமது மூட்டை முடிச்சுகளுடன் உயிருக் கஞ்சி ஓட்டமெடுத்தனர். நேருவின் மூதாதையரும் தமது திரண்ட சொத்தனைத்தையும் துறந்து, விரைந்தோட நேர்ந்தது.

காஷ்மீர நாட்டு மங்கையர், கூரிய மூக்கும் கரிய விழிகளும் வாய்ந்த நல்ல அழகியர். இளம் பருவ நங்கையுடன் கங்காதர நேருவைக் கண்டதும், ஆங்கிலப் போர் வீரர்களுக்கு ஐயப்பாடு நேர்ந்தது. 'நம் குலமாது ஒருத்தியை இவர் கவர்ந்து செல்கின்றார்!' என்று அவர்கள் கருதி, ஈட்டியை நீட்டி வழி மறித்தார்கள்.

நல்ல வேளையாகக் கங்காதர நேருவுக்குக் கொஞ்சம் ஆங்கிலம் தெரிந்திருந்தது. அது கொண்டு அவர் கொச்சை ஆங்கிலத்தில் பேசித் தமது உண்மை நிலையை உணர்த்தினார்; அப் பெண் தம் சகோதரி என்பதையும் தெளிவுபடுத்தினார். அதனால், அவ்வீரர்கள் இரக்கம் மிகுந்து அக்குடும்பத்திற்கு வழி விட்டார்கள். அன்றேல், அன்றே அக்குடும்பம் வாளுக்கு இரையாகி முடிந்து போயிருக்கும்!

'ஊழின் பெருவலி யாஉள? மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.'

என்பது பொய்யாமொழி அல்லவா? பின்னர், அக்குடும்பத்திலே பெருமகனாரொருவர் தோன்றி, வழி மறித்த ஆங்கிலேயருடன் மல்லுக்கு நிற்க வேண்டுமே! அன்னியரை மடக்க அன்னியமொழி பெரிதும் பயன்பட்டதை அக்குடும்பத்தார் மறக்க

வில்லை. அவர்கள் வடவிந்தியாவிலே அலகபாது நகரிற்புகுந்து, குடியேறினார்கள்.

ஜவாஹரின் பெரிய தந்தையருள் ஒருவரான நந்தலால் நேரு என்பார், வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டு, செல்வமும் சிறப்பும் எய்தி நின்றார். கங்காதர நேருவுக்கு 1861-ஆம் ஆண்டு மோதிலால் என்னும் ஒரு குமாரர் தோன்றினார். பிள்ளைப் பருவத்திலே மோதிலாலிடம் முரட்டுக்குணமே மிகுந்திருந்தது. ஆயினும், அவரது சீரிய மதி கண்டு ஆசிரியரனைவரும அவரிடம் அன்பு காட்டி வந்தனர்.

வரவர மோதிலாலிடம் அறிவும் ஆற்றலும் நிரம்பின. வழக்கறிஞர் தொழிலிலே அவர் புகுந்து, தமது அறிவு நலத்தினால் திரண்ட செல்வமும், பரந்த கீர்த்தியும் பெற்றார்; மேனாட்டு நடையுடைகளில் மோகம் மிகுந்தார்; குபேர செல்வத்தைப் போலத் திரவியம் சேர, இந்திரனைப் போன்று போக வாழ்வு வாழ்ந்தார்.

அலகபாது நகரிலேயுள்ள அவரது மாளிகை ஆனந்த பவனம் எனப்படும். பெயருக்கேற்ப அங்கு ஆனந்தம் தாண்டவம் ஆடியது. ஐரோப்பிய அதிகாரிகளும் இந்தியப் பெருமக்களும் அடிக்கடி அம்மாளிகை சென்று, மோதிலால் நேருவுடன் அளவளாவி, அரிய விருந்துண்டு, கேளிக்கை பலவும் கண்டு களிப்புறுதல் உண்டு.

அந்நாளிலே மோதிலாலை மிஞ்சும் செல்வச் சீமான்—சுகவாச புருஷன்—சிறப்பான வழக்கறிஞன், அலகபாது நகரில் இல்லை. பூமகளும் நாமகளும் நயந்து நின்று, அம்மாளிகையை மேம்படச் செய்து வந்தனர் என்றே இயம்ப வேண்டும்.

# 3. குழந்தைப் பருவம்

'மோதி' என்னும் சொல்லுக்கு 'முத்து' என்பது பொருள். மோதி லாலின் வயிற்றில், ஜவாஹர் எனும் மாணிக்கம் பிறந்தது. 1889-ஆம் வருஷம், நவம்பர் மாதம், 14-ஆந்தேதி நம் தேசத்துக்கு ஒரு நன்னாள். அன்றுதான் பண்டித ஜவாஹர்லால் தோன்றினார். கண்ணன் பிறந்ததும், காசினி களித்தது. ஜவாஹரின் தோற்றங் கண்டு, பாரத பூமியும் மகிழ்ந்தது என்னலாம்.

கோடீசுவரரின் பிள்ளை கோலாகலமாக வளரக் கேட்க வேண்டுமோ? ஜவாஹரின் வளர்ச்சியில் ஒரு புதுமை உண்டு.

மோதிலாலிடம் முகம்மதியக் கணக்காயர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் முன்ஷி முபாரக்கு அலி. அவரது நரைத்த தாடியும் பழுத்த முகமும் ஜவாஹர் மனத்தைக் கவரும். அடிக்கடி அவரிடம் சென்று சிறுவர் ஜவாஹர் கொஞ்சுவார். அப்போது 1857-ஆம் வருஷப் போரில் தமது குடும்பம் பட்ட பாட்டையெல்லாம் அவர் விரித்துரைப்பார்; அப்போரின் நிகழ்ச்சிகளையும் நன்கு நவில்வார்.

போரின் வீர வரலாறு, கொடுமைக் கூத்து, இவற்றை அச்சிறுவர் உற்றுக் கேட்பர்; இடையே இடையே அவர் உடல் சிலிர்க்கும்; உள்ளத்தே ஒரு துடிப்புங் காணும்; பின்பு சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்து கிடப்பார். அது கண்டு, அம்முன்ஷியும் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணுவார்; சிறுவரைத் தடவிக்கொடுப்பார். இது நிற்க.

அந்நாளிலே ஆங்கிலேயருக்குத் தாம் அரசாளும் இனத்தவர் என்ற கர்வம் அதிகம். ஆங்கிலேயருக்கும் நம் இந்திய மாதருக்கும் பிறந்த

வரே ஆங்கிலோ-இந்தியர். இவர்களை உலக வழக்கில் சட்டைக்காரர் என்பர். இவர்களிடமும் அந்தச் செருக்கு மிகுதி. இவ்விருவருக்கும் இந்தியரைக் கண்டால், ஏளனம் பிறக்கும்; வசை மாரியும் உதிக்கும்.

ஜவாஹரின் பெரிய தந்தையாரின் மைந்தர்கள் அவ்விரு திறத்தாரின் தலையெடுப்பைக் குறித்து அடிக்கடி பேசுவார்கள்; 'அந்த அவமதிப்பை எதிர்த்தடக்க வேண்டும்!' என்று படபடப்புடன் உரைப்பார்கள்; 'இந்தியரனைவரும் தலை நிமிர்ந்து நின்று தட்டிப் பேச வேண்டும்!' என்பார்கள். அப்போது பக்கத்திலே சிறுவர் ஜவாஹர் இருந்து, எல்லாவற்றையும் உற்றுக் கேட்பார்; 'நாமும் கச்சை கட்ட வேண்டும்!' என்று ஓர் உணர்ச்சி கொள்வார்; காலத்தையும் கருதியிருப்பார்.

ஆங்கிலேயர், சட்டைக்காரர் ஆகிய இருவரும் இந்தியரை ஏதோ உயிர்ப்பிராணி என்றே கருதுவர்; கன்றையும் தாயையும் குழந்தைகள் அடித்தடித்து ஆனந்தம் அடைவதேபோல, இந்தியரைக் கொன்று பெருங்களிப்புக் கொள்வர். துணிவு மிகுந்த இந்தியரின் உற்றூர் வழக்குத் தொடுத்தாலும் என்ன பயன்?

வழக்கை விசாரிக்கும் நீதிபதிக்கு ஆலோசனை கூற, எழுவர் அல்லது ஒன்பதின்மர் 'ஜூரிகள்' என்று அமர்வர். அந்த ஜூரிகளும் ஆங்கிலேயர்களாகவே இருப்பார்கள்; 'குற்றம் ஏதுமில்லை,' என்றே அவர்கள் ஆலோசனை சொல்வார்கள். நீதிபதி அதனை மதித்து, ஆங்கிலக் குற்றவாளியை விடுதலை செய்துவிடுவார். இதனையும் அண்ணன்மார் பேசி நிற்கையில், ஜவாஹர் கூர்ந்து கவனிப்பர்.

அந்நாளிலே இரயில் வண்டிகளில் பல அறைகளை ஐரோப்பியர்க்கும் சட்டைக்காரர்க்கும் தனியே ஒதுக்கி வைப்பதுண்டு. அப்புகை வண்டிகளிலே இதர அறைகளில் ஜனங்கள் புளி மூட்டை போல நிரம்பிக் கிடப்பார்கள். ஒதுக்கிய அறைகளோ, காலியாய்க் கிடக்கும்; அல்லது அவற்றில் ஒருவர் இருவரே இருப்பர். அப்போதும் அந்த வண்டிகளில் இந்தியர் சென்று ஏறக்கூடாது.

பொது மக்கள் மாலை வேளையில் வந்து உட்காருவதற்காகப் பூங்கா வனங்களிலே விசுப்பலகை போட்டிருக்கும். அவற்றிலும் சிலவோ, அரசாளும் இனத்துக்கென ஒதுக்கப்பெற்றிருக்கும். அவற்றிலே இந்தியர் அமருதல் ஆகாது. அவ்விதம் வேற்றுமையும் இழிவும் காட்டப்பட்டமை கண்டு, ஜவாஹர் கோபமே கொள்வர்; இந்தியரில் எவரேனும் வெள்ளையரை எதிர்த்து நின்றால், அல்லது ஏட்டிக்குப் போட்டி செய்தால், அது கேட்டு மகிழ்ச்சி எய்துவர்.

ஜவாஹரின் பெரியப்பர் புதல்வருள் ஒருவர் அடிக்கடி அந்த வம்புச் செயல்களில் சிக்கிக்கொள்வார்; சமயம் வாய்த்த போதெல்லாம் அவ்வகுப்பாரை வம்புக்கும் இழுப்பார். அப்போது சிறுவர் ஜவாஹர் பரபரப்படைவர். தமையனர் வெற்றி அடைய வேண்டும் என்று ஆவல் கொள்வர். பலசாலியாதலின், தமையனர் எதற்கும் அஞ்சுவதில்லை.

அநீதி, அவமானம் இரண்டையும் ஆண்மையுடன் எதிர்த்துப் போரிட வேண்டும்; தலையிலடித்துப் போக்கவேண்டும். இதுவே ஜவாஹரின் கருத்தாம். சாதிப் பகை, வகுப்புப் பூசல் என்பன அவரிடம் தலை காட்டா.

# 4. சீரிய உணவு

வயிற்றுக்கு இடுவது மட்டும் உணவன்று; செவிக்கும் சிந்தைக்கும் உணவு என்பது உண்டு. சில குழந்தைகள், எப்போதும் ஏதேனும் தின்று திரியவே விரும்பும். சில குழந்தைகள், சதா குறும்பு பண்ணிக் கும்மாளம் போடும். சில குழந்தைகள், எந்நேரமும் பெரியாரின் பேச்சைக் கேட்டு, வாயைப் பார்த்து நிற்கும்.

'செவிக்குஉணவு இல்லாத போழ்து, சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.'

என்கிறார் தெய்வப் புலவர். தமையன்மாரின் பேச்சைக் கேட்டறிவதுடன் குழந்தை ஜவாஹர் நிற்கவில்லை; தந்தையார் மோதிலாலும், அவர் நேசரும் பேசுவதையும் அறிய ஆசைகொள்வர். மாலைவேளைகளிலே மோதிலாலின் மாளிகையில் அலகபாது நகர அறிஞர் பலர் வந்து கூடுவர். அவர்களுடன் உரையாடுவதை அவர் ஒரு பொழுது போக்காகக் கொள்வர்.

அப்போது, 'இவர்கள் என்ன பேசுகிறார்கள்? பார்ப்போம்!' என்று அச்சிறுவர் எட்ட மறைந்து நின்று, உற்றுக்கேட்பர்; பேச்சிலே சுவை மிகுந்தால், மறைவிலிருந்து தலையை நீட்டியும் உற்று நோக்குவர். தந்தையார் அது கண்டதும், தம் குமாரரை வாரியெடுத்து மடியின்மீது அமர்த்திக் கொள்வார். 'அறிஞரின் உரைகளை நேரிற்கேட்கிறோம்!' என்று அச்சிறுவர் மகிழ்ச்சியடைவர்.

மோதிலாலின் மனைவியார், அண்ணியார் முதலியவர், அடிக்கடி நோன்பு நோற்பர்; பூசை புரிவர். அவ்வேளைகளில், ஜவாஹரும் ஆர்வம்

மிருந்து அருகே இருந்து, அனைத்தையும் கவனிப்பர்; தாமும் நோன்பு நோற்பது போல நடிப்பர். சில சமயங்களில் அந்நங்கையர் கங்கைக்கு நீராடப் போவர்; அல்லது வந்தனை வழிபாடு செய்ய ஆலயங்களுக்குச் செல்வர். அப்போது சிறுவரும் உடன் செல்வர்; செல்லுங்காலையில், அங்குள்ள காட்சிகளைக் கண்டு களிப்பர்; பத்தரின் தொழுகையை உற்று நோக்கி உணர்வர். முற்றவும் துறந்த துறவிகளைக் காண அவர்கள் போகும் பொழுதும் ஜவாஹர் உடன் சென்று, அங்கு வந்து போவாரின் பேச்சு, மனப்பான்மை இவற்றை அறிந்து ஆனந்தம் எய்துவர்.

ஆனந்தபவன மாளிகையிலே நீந்துவதற்காக ஒரு குளம் வெட்டியிருந்தார் மோதிலால். அக் குளத்தில் குதித்து, நீச்சல் கற்றுக்கொள்வதில் ஜவாஹருக்கு ஆசை மிகும். எங்கே போனாலும் சரி; யாரைக் கண்டாலும் சரி; புதிய புதிய செய்திகளையும் நிகழ்ச்சிகளையும் அறிய அவர் தவறார்.

அந்நாளிலே, தென்னாப்பிரிக்காத்தேசம் இங்கிலாந்துக்கு உட்பட்டிருந்தது. அந்த அடிமை வாழ்வு கண்டு தென்னாப்பிரிக்க மக்கள் மனமொப்பவில்லை. அவர்கள் போயர்கள் எனப்படுவார்கள். அவர்கள் ஆயுதம் தரித்து இங்கிலாந்துடன் போருக்கு எழுந்தார்கள். எழுந்த போது, ஆங்கிலச் சேனைக்கும் அவர்களுக்கும் பல சண்டைகள் நடந்தன.

அச்சண்டைகளின் விவரம் பத்திரிகைகளிலே வெளியாகும். அவற்றை ஜவாஹர் ஆவலுடன் படித்தறிவர்; போயரிடமே மிக்க பரிவு கொள்வர். ஏன்? அடிமை வாழ்விலிருந்து விடுபடவே போர் புரிவதால், போயரே வெற்றி பெற வேண்டும் என்று அவர் மனம் விரும்பி நிற்பர். இளமையில்

எளியவர்பால் அவ்விதம் ஜவாஹர்கொண்ட பரிவு, நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது.

போயர் யுத்தத்துக்குப் பின், ருஷியாவுக்கும் ஜப்பானுககும் இடையே போர் கிளம்பியது. மிகச்சிறிய தேசமான ஜப்பான் மிகப் பெரிய ருஷியாவை எதிர்க்க முனைந்து முயலும்: பல னும் அடைந்து வரும். இதனையும் பத்திரிகையிலே படிக்கப் படிகக அச்சிறுவரின் ஊக்கம் ஓங்கும்; உற்சாகம் வளரும்.

உடனே ஜப்பான் தேசத்தைப் பற்றியசெய்தி களை அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை ஜவாஹருக்கு அதிகரித்தது. ஜப்பானிய சரித் திரத்தை வாசித்ததும், அவரது மனம் விரிந்தது. பழங்கால ஜப்பானிய வீரரின் வாழ்க்கை வரலாறு அப்பாலரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. ஜப்பானைப் பற்றிய நூல்கள் பலவும் அவரது பெட் டியில் நிரம்பின.

"அப்போதே, எனது உள்ளத்தில் தேசீய இலட்சியங்கள் உதிக்கலாயின. யான் இந்தியாவின் சுதந்தரத்தைக் குறித்து எவ்வளவோ எண்ணலா னேன்; ஐரோப்பாவின் ஆதிக்கத்திலிருந்து ஆசியா விடுபட வேண்டும் என்றும் விரும்பி நின்றேன்; வீரச் செயல்கள் விளைக்க இச்சை கொண்டேன். கையில் வாள் தாங்கி, இந்தியாவின் சுதந்தரத்தை நிலை நாட்டவும் நினைக்கலானேன்!" என்று தமது சுய சரிதையிலே பண்டித ஜவாஹர் எழுதியுள்ளார்.

'தொட்டிற்பழக்கம் சுடுகாடு மட்டும்,' என்பது ஒரு பழமொழி. இளமையில் முளைத்த இலட்சியமும் உணர்ச்சியும் வயது ஆகஆக, நம் பண்டிதரிடம் விரிவடைந்தன. ஆதலின், தமது வாழ்வையும் அறி வையும் தேச சேவையில் அவர் ஈடுபடுத்தலானர்.

# 5. தேசப்பற்று

ஆயிரத்துத்தொள்ளாயிரத்து ஐந்தாம் ஆண்டிலே, ஜவாஹருக்கு வயது பதினைந்து ஆயிற்று. சீமையிலே செல்வக் குமாரரைப் படிக்க வைக்க வேண்டும் என்று மோதிலால் விரும்பினர். உடனே அவர் குடும்பம் முழுதும் இங்கிலாந்துக்குப் பயணமாயிற்று.

அங்கே பணக்காரர் வீட்டுப் பிள்ளைகள் படிக்கும் இடம் ஹாரோ எனப்படும். அவ்விடத்தே மைந்தரைப் பள்ளியில் சேர்த்துவிட்டு, அக்குடும்பத்தார் இந்தியாவுக்குத் திரும்பினர். தாம் வேற்று நாட்டிலே தன்னந்தனியாய் இருத்தல் கண்டு, ஆரம்பத்திலே ஜவாஹர் சிறிது குழம்பினர்; 'ஆங்கில இளைஞர் வேறு, நாம் வேறு,' என்ற நினைப்பு வந்து அவரை மூடிக்கொண்டது.

அங்கும் அவர் பற்பல நூல்களைப் படித்தார்; பத்திரிகைகளையும் வாங்கி வாசித்தார். அவை எல்லாம் அரசியல் மணமே நிரம்பியவை. ஏனைய மாணவர் அவரைப் போல விரிவாகப் படிக்கவில்லை; பற்பல விளையாட்டுகளிலேயே மிக்க கவனம் செலுத்தி வந்தனர். அது கண்டு அவருக்கு அதிசயமே பிறந்தது. தம் தந்தையாருக்கும் அவ்வாறே அவர் எழுதினர்.

அவ்வருஷ முடிவிலே, இங்கிலாந்தின் பாராளும் மன்றம் என்னும் சபைக்குத் தேர்தல்கள் நடந்தன. அவற்றைப்பற்றி ஊடுருவி நோக்கியும் படித்தும் வந்தார் ஜவாஹர். ஒரு நாள் அத்தேர்தல்களைக் குறித்து, வகுப்பு ஆசிரியர், மாணவரை எல்லாம் கேள்வி கேட்டார். எல்லாரும் விழித்து நின்ற

னர். ஜவாஹரோ, தேர்தல் விவகாரங்கள் அனைத்தையும் விளங்க உரைத்தார். ஆசிரியரும் மாணவரும் அது கேட்டு வியப்பு மிகுந்தனர்.

புத்தகமும் கையுமாய் இருந்தால் போதுமா? சுற்றுப்புற நிலைமை, சூழ்நிலை இவற்றையும் ஜவாஹர் கவனித்து வரலானர். அத்தருணம் 'ரைட்டுச் சோதரர்' என்பார், ஆகாய விமானம் அமைத்து, அதனைப் பிரபலஞ்செய்து வந்தனர். பலரும் விமானத்தில் ஏறிப் பறந்து ஆச்சரியம் கொண்டனர்.

ஜவாஹர் தம் தகப்பனருக்குக் கடிதம் எழுதியபோது "விமானத்திற் பறத்தல் இங்கே பிரபலம் ஆகி வருகிறது. ஆதலின், கூடிய விரைவிலே, நானும் இந்தியாவுக்கு விமானத்தில் வந்து போவேன்!" என்று வரைந்திருந்தார். என்ன மதி யூகம்! 'விமானப் பயணம் வெகு பிரபலம் ஆகும்,' என்று ஆதியிலேயே அவர் நினைத்தார். அப்பால் இரண்டு உலக மகா யுத்தங்கள் நேர, விமானங்கள் எங்கும் பெருகிவிட்டன. மனிதரும் தபால்களும் இப்போது எங்கும் விமானமூலம் போய் வருதல் வெளிப்படை.

1906, 1907 இந்த ஆண்டுகளிலே இந்தியாவிலே அரசியற்கிளர்ச்சி தீவிரமாயிற்று. பால கங்காதர திலகர், லாலா லஜபதி ராய், விபின சந்திர பாலர், பாபு அரவிந்த கோஷ் முதலியவர் மார் தட்டி நின்று, 'சுயராஜ்யமே வேண்டும்!' என்று கூறி, அதிகாரிகளைக் கலக்கி வந்தனர். அதன் விவரங்களில் ஒரு சிறிதே இங்கிலாந்தின் பத்திரிகைகளில் வெளியாகும். ஆனலும், அவை அனைத்தையும் ஊக்கத்தினல் உணர்ந்து, உள்ளக் கிளர்ச்சியடைந்தார் ஜவாஹர்லால்.

வாலைக் குழைத்து வெகுண்டெழுந்த வேங்கையே போல அந்நாளிலே வீறுப்புடன் எழுந்தனர் வங்க இளைஞர். பால கங்காதர திலகர் மகாராஷ்டிரத்தையும் தேசத்தையும் தட்டி எழுப்பி வந்தார்; பஞ்சாபு சிங்கமான லஜபதி ராயோ, வீர கர்ஜனை புரிந்து நின்றார். அவரை அதிகாரிகள் திடீரென நாடு கடத்தினார்கள்; திலகர் மீதும் பெரிய வழக்குத் தொடுத்தார்கள்.

அவற்றையெல்லாம் அறிந்த ஜவாஹர்லால், படபடத்தார்; மற்றைய மாணவருடன் பேசி ஆறுதலடைய முயன்றார். அங்கே யாரிடம் பேசி ஆறுவது? எல்லாரும் ஆங்கில இளைஞர். சுற்றுப்புற நிலைமையையே உணராத அவர்களுக்கு இந்தியாவினிடம் பரிவு இருக்குமோ? அன்பு உதிக்குமோ? அப்போது, தமது தனிமை நிலை அவருக்குத் தெள்ளெனத் துலங்கியது.

கரிபால்டி என்பவர், இத்தாலிய தேச பத்தர்; அத்தேசத்தின் சுதந்தரத்துக்காகப் போராடிய பெருவீரர். அவரது வாழ்க்கைச் சரிதையை ஜவாஹர் விரும்பிப் படித்தார்; 'இவ்வாறுதானே இந்தியாவிலும் நம் தலைவர்களும் போராடுவார்கள்!' என்று மனக் கண்ணால் நோக்கினார். நோக்கவே, அவருக்கு அங்கே இருப்புக் கொள்ளவில்லை.

உடனே அவர் கேம்பிரிட்ஜ் நகரஞ் சேர்ந்து, ஆங்குள்ள கலாசாலையிலே சேர்ந்தார். விஞ்ஞான சாஸ்திரமே பட்டத்திற்கு உரிய பாடமாயினும், அரசியல் அறிவையும் வளர்த்து வர அவர் மறக்கவில்லை. இந்தியாவிலே நாளுக்கு நாள் அரசியல் கொந்தளிப்பு அதிகரித்து வந்தது. தேசியத் தலைவர்களோ, தீரமுடன் அதிகாரிகளுடன் போராடி

நின்றூர்கள். திலகரும் கோஷரும் பெருங்கிளர்ச்சி புரிந்து வந்தனர்.

அதை அறிந்ததும், "நாம் இப்பொழுது இந்தியாவில் இல்லையே! நம் தலைவர்களின் சொற்படி செயலாற்றக் கொடுத்து வைக்கவில்லையே!" என்று ஜவாஹர் துடித்தார். அச்சமயம் இலண்டனிலே படித்து வந்த இந்திய மாணவருட் பலரும் வங்காளப் புரட்சி வீரரின் செயலைக் கேட்டுப் புகழ்ந்து பாராட்டினர். ஆயினும், என்ன! எல்லாம் அனற்கக்கும் பேச்சளவிலேயே அமைந்தன.

அவருள் பலரும் ஐ. ஸி. எஸ். உத்தியோகமோ, உயர்நீதி மன்றத்தில் நீதிபதி பதவியோ, பின்னளிலே பெற்ற போது, அரசியலில் தொடர்பே கொள்ளாது போயினர் என்று தமது சுயசரிதையில் வருந்தி வரைந்திருக்கிறூர் வீர ஜவாஹர்.

'சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்!'

என்னும் பொய்யா மொழி பொய்க்குமோ? அவர் சீமையில் இருந்தபோது லஜபதிராய், விபின சந்திரர், கோகலே முதலியவர் அங்கே அரசியல் விஷயமாக வாதாடச் சென்றிருந்தனர். அவர்களுள் லஜபதிராயின்மீதே ஜவாஹருக்கு அன்பு பிறந்தது. திலகரின் கொள்கையும் கிளர்ச்சியும் அவருக்குப் பெரிதும் பரவசம் ஊட்டின. அதனல், திலகதாஸராகவே அவர் திகழ்ந்தார்.

அக்காலத்திலே அவர் தந்தையாரான மோதிலால் நேரு காங்கிரஸ் மகா சபையிற்சேர்ந்து, நிதானக் கட்சியிலேயே இருந்து வந்தார். ஆயினும், வர வர அந்நிதானம் தீவிரமாக மாறத்

தொடங்கிய விதத்தை அடுத்து வரும் பக்கங்களிற் பார்க்கலாம்.

ஐ. ஸி. எஸ். பரீட்சையில் தேறினல், கலெக்டராகவும் நீதிபதியாகவும் வரலாம். ஆகவே, அப் பரீட்சைக்குப் போகலாம் என்று ஜவாஹர் ஆரம்பத்திலே நினைத்தார். அப்பாலோ, 'அது வேண்டா; தந்தையாரின் தொழிலிற்புகுவோம்; பாரிஸ்டர் பட்டம் பெறுவோம்,' என்று துணிந்தார்.

அவ்விதமே பாரிஸ்டர் பட்டம் எய்தி, 1912-ஆம் ஆண்டு இந்தியாவுக்குத் திரும்பினர் பண்டித ஜவாஹர்லால் நேரு.

## 6. தெரிந்து தெளிதல்

செல்வச் சீமானின் செல்வக்குமாரர் ஜவாஹர்.

எனவே, சும்மா இருந்து சுகமே வாழலாம். அவரது மதிநுட்பமும் செயலாற்றும் சிந்தையும் அச்சுகவாழ்வினுக்கு ஒவ்வா. ஆதலின், 'பிறந்த தேசத்திற்குப் பயன்படுதல் வேண்டும்; பெருஞ் செயல் புரிதல் வேண்டும்,' என்னும் துடிப்புடனே அத்திருக்குமாரர் இந்தியாவுக்குத் திரும்பினர்.

அதற்குரிய தலைவரை நாடியடைதல் அவசியம்; ஏற்ற தோழரையும் இனிது எய்தல் முக்கியம்; தேச நிலையை ஆராய்ந்து பார்த்தல் வேண்டும்; காலமும் இடமும் கருதி முயலுதல் தேவை. ஆதலின், அத்தகைய ஆராய்ச்சியில் ஜவாஹர் இறங்கினர்.

> 'தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
> அரும்பொருள் யாதொன்றும் இல்.'

என்பது மெய்ம்மொழி அல்லவா? இந்தியாவுக்கு வந்து சேர்ந்த 1912-ஆம ஆண்டின் முடி

விலே, பங்கிபுரம் எனும் நகரில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபைக்கு அவர் ஒரு பிரதிநிதியாய்ச் சென்றார்; அச்சபையிலே தலைவர்களின் ஆடை நேர்த்தியையும் ஆடம்பரப் பேச்சையுமே கண்டார்; எல்லாம் வெளி மயக்கே என்று கொண்டார்.

கோபால கிருஷ்ண கோகலே என்பார் ஒருவரே உள்ளன்புடன் உழைக்கும் உத்தமரென்பது ஜவாஹருக்குத் தோன்றியது. தோன்றவே, கோகலே அமைத்துள்ள இந்திய ஊழியர் சங்கம் என்பதில் சேர்ந்து சேவை செய்யலாமென அவர் கருதினார். ஆனாலும், அச்சங்கத்தின் சொல்லும் செயலும் அவரது கருத்தைக் கவரவில்லை.

வயிறு வளர்க்க வகையின்றி, முறிச் சீட்டு எழுதிக்கொடுத்து, ஒப்பந்தத்தின்மேல் பிஜித் தீவு சென்றிருந்த நம்மவர், அங்கே ஆடுமாடுகளினும் இழிவாக வாழ்ந்து வந்தனர். 'இந்த ஒப்பந்தக் கூலி முறை ஒழிய வேண்டும்,' என்று இந்தியா எங்கும் கிளர்ச்சி நடந்து வந்தது.

வாடி வதங்குபவருக்கு வகைதேடி அமைக்கும் துடிப்பு மிகுந்த வீர ஜவாஹர், அக்கிளர்ச்சியிலே பங்கு கொண்டார். தென்னாப்பிரிக்காவிலே வெள்ளையரின் நிறத்திமிருக்கு ஆளாகி வருந்திய நம்மவரின் நலத்திலும் அவரது நாட்டம் பதிந்தது. அதற்கு ஐம்பதினயிரம் ரூபாய் சேர்த்துக் கொடுத்து அவர் உதவினார்.

அவ்வாறிருக்கையில் ஐரோப்பாவில் 1914-ஆம் ஆண்டில் முதல் உலக மகா யுத்தம் மூண்டது. அடிமைகளாய்க் கிடந்த இந்தியருட்பலரையும் போர்ச் சேவகத்துக்கு இங்கிலாந்து இழுத்துச் சென்றது; இங்கிருந்து ஏராளமான பணத்தையும்

எடுத்துக்கொண்டது. அவ்வேளை, ஏன் என்று எடுத்துப் பேசக்கூடிய தீவிரவாதி ஒருவரும் இல்லை. திலகரோ, சிறையில் கிடந்தார்.

யாரேனும் தலை தூக்கினல், மண்டையிலே அடிக்கும்நோக்குடன் 'இந்தியப் பாதுகாப்புச் சட்டம்' என்பதை அதிகாரிகள் இயற்றியிருந்தார்கள். இந்திய மக்களுக்கோ, மனத்தகத்தே மிக்க எரிச்சல் உண்டு. ஆனாலும், இங்கிலாந்தை நேசிப்பதாக விதியின்றி எல்லாரும் விளம்பி நின்றனர். எனினும், மகாயுத்தத்தில் இங்கிலாந்து அழிந்துபோய்விட வேண்டும் என்று விரும்பாதார் இலர்.

பின்பு லோகமானிய திலகர் விடுதலை பெற்று வந்தார்; தேசத்தை மீண்டும் தட்டியெழுப்ப, ஹோம் ரூல் சங்கம் எனப்படும் சுயராஜ்ய சங்கங்களை ஏற்படுத்தினர். சென்னையிலுள்ள பிரமஞான சங்கத்தின் தலைவியாரான அன்னி பெஸண்டம்மையாரும் அத்தகைய சங்கங்களை அமைத்து, அரிய கிளர்ச்சி செய்து வந்தனர்.

அக்கிளர்ச்சியும் இயக்கமும் ஜவாஹரை இழுத்தன. தேசத்திலே காங்கிரஸின் முனைப்புப் பெருகியது. அதில் அவர் கலந்துகொள்ளத் தவறவில்லை; ஆயினும், பொதுக்கூட்டங்களிலே பேசத் தயங்கினர். 1915-ஆம் வருஷத்திலே அலகபாது நகரில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. அதில் பேசும் வண்ணம், பலரும் அவரை வேண்டிக் கொண்டனர்.

அவரும் ஒருசிறிது பேசி அமர்ந்தார். கூட்டம் முடிந்தது. ஸர் தேஜ் பகதூர் ஸாப்ரூ என்பார்—அலகபாதிலே பெரிய வழக்கறிஞர்—அரிய மேதை—அவரைக் கட்டித் தழுவிப் பாராட்டினர். அதன்

பின்பே, பொதுக்கூட்டங்களில் பெரிதும் பேசத் துணிந்தார் ஜவாஹர். 'ஸாப்ரூவே சிறந்த தேசத் தலைவராவார்,' என்று அன்று இளைஞர் பலரும் எதிர் பார்த்தனர்.

ஜவாஹரும் அங்ஙனமே ஆதியில் எண்ணினு ராயினும், பின்னர் ஏமாறிப்போனுர். தீவிர நோக்கும் போக்கும் கொண்டுள்ள தம் குமாரர், வெடி குண்டும் துப்பாக்கியும் கையாளும் புரட்சிக் கூட்டத்தில் புகுந்துவிடுவாரோ என்று மோதிலாலுக்கு அச்சம் நிகழ்ந்தது. பலரும் அவ்விதமே எண்ண நேர்ந்தது. ஆயினும் என்ன?

"அத்தகைய புரட்சியில் எனக்குப் பற்று இல்லை. எனினும், அரசியலிலே நமக்கிருந்த இழி நிலை கண்டு, நான் பொறுக்கவில்லை. நிமிர்ந்து நின்று எதிர்க்கவேண்டும் என்பதே என் துணிவு. அன்னிய ஆட்சியைப் போக்க வேண்டுமாயின், தனி மனிதனும் தேசமும் வீறுப்பான செயலாற்றினுல்தான் சிறப்புண்டு!" என்று அவர் சொல்லியுள்ளார்.

ஜவாஹர், செயலில் சிந்தை வைக்குமுன்னம், ஆய்ந்து கூர்ந்து பார்ப்பார்; அவ்விதம் எண்ணிப் பார்த்த பின்பே செயலில் இறங்குவார்; இறங்கி விட்டால், முன்வைத்த காலைப் பின்வாங்குவதென்பது அவரிடமில்லை.

தம் மனத்துக்கு உகந்த தலைவரையும், செயலுக்கு ஏற்ற துணைவரையும், அதற்கு ஒத்த காலத்தையும் அவர் எண்ணி நிற்கையில், 1916-ஆம் வருஷம் இலட்சுமணபுரியில் நடந்த காங்கிரசிலே மகாத்துமா காந்தியைச் சந்திக்க நேர்ந்தது. தென்னுப்பிரிக்காவிலே காந்தி செய்த சேவை அவ்வளவாக ஜவாஹரின் உள்ளத்தில் ஊன்றவில்லை.

பீகார் மாகாணத்திலுள்ள சம்பரான் ஜில்லா அவுரி உழவருக்கு உழைக்க மகாத்துமா முயன்ற காலையில், 'ஊரை விட்டுப் போ!' என்று அதிகார ஆணை பிறந்தது. அந்த அதிகார ஆணையை அவர் எதிர்த்து, 'ஊரை விட்டுப் போகேன்! உங்களால் ஆனதைச் செய்யலாம்!' என்று சொல்லிய மாற்றம் ஜவாஹரின் மனத்தை அள்ளியது.

அதன்பின், கவியரசியார் சரோஜினி தேவியாரின் பாக்களும் பேச்சும் ஜவாஹருக்குப் பரவசம் ஊட்டின; தேசீய உணர்ச்சியையும் ஓங்கச் செய்தன.

## 7. காந்தி நேசம்

முதல் உலக மகாயுத்தத்தின்போது ஆளையும் பணத்தையும் இங்கிருந்து இஷ்டம் போல ஆங்கிலேயர் கொண்டு போனது ஒரு புறமிருக்க, அவர்கள் தேன்சொட்டப் பேசியும் நம்மை மயக்கி வந்தார்கள்; 'யுத்தம் தீர்ந்ததும், அரசியலைத் திருத்தி அன்பு காட்டுவோம்,' என்று வானளாவ வாய்ப்பறை அறைந்தார்கள்.

இலவு காத்த கிளி போல நம்மவர் இருக்கும் சமயம், ரௌலட்டுச் சட்டம் என்பதை இயற்றினர் அதிகார வர்க்கத்தார். கிளர்ச்சி புரிவாரை உடனே பிடித்து, விசாரணை இல்லாமல் சிறைக்குள் தள்ளுவதே அச்சட்டத்தின் நோக்கமாம். 'குதிரை தூக்கிப் போட்டதும் அல்லாமல் குழியும் பறித்ததே!' என்று மக்களுக்கு மிக்க ஆத்திரமே மூண்டது.

அந்நிலையில், மக்களின் ஆவேசத்தை அமைதியான வழியில் திருப்பக் கருதிய காந்திமகானே, 'எல்

லாரும் ஒரு நாள் முழுதும் உண்ணு நோன்பு கொண்டு, வேலைகளையெல்லாம் நிறுத்தி, ஆண்டவனைத் தொழுது, பொதுக்கூட்டம் கூட்டிச் சத்திய விரதம் பூண வேண்டும்,' என்றார். அவ்வாறே தேச மக்கள் நடந்தார்கள்.

பஞ்சாபு மாகாணத்திலே அமிருதஸரஸ் நகரில் அவ்விதம் கூடியிருந்த ஜனங்களின்மீது பீரங்கி கொண்டு சுட்டுப் படுகொலை புரிந்தான் ஜெனரல் டயர் என்பான். ஆங்கிலேயர் அவனுக்குப் பண முடிப்பும் பட்டாக்கத்தியும் பரிசளித்தனர். பாரத சமூகம் அது கண்டு பதைப்புக் கொண்டது.

இதற்கிடையிலே, ஆங்கிலேயர் ஓரளவு சீர் திருத்தம் வழங்கினர். அதனையும் பஞ்சாபு படுகொலையையும் பற்றி ஆலோசிக்க அமிருதஸரஸ் நகரிலே 1919-ஆம் வருஷ முடிவில் காங்கிரஸ் கூடியது. லோகமானிய திலகரும் அதற்கு வந்திருந்தார்; காந்தியும் விஜயஞ் செய்திருந்தார். பலர் மகாத்துமா காந்தியின்மீதே மோகங்கொண்டு விட்டனர். 'மகாத்துமா காந்திக்கு ஜே!' என்னும் கோஷமும் வலுத்தது.

அது கண்டு பிரமித்தார் ஜவாஹர். பஞ்சாபு படுகொலையை விசாரித்தறியக் காங்கிரஸ் மகா சபையும் ஒரு பஞ்சாயத்தை நியமித்தது. அதில் மோதிலால், சித்தரஞ்சனதாஸ், பண்டித மாளவியா, ஜெயக்கர் ஆகிய சட்டப் பேரறிஞர் அங்கம் வகித்தனர். ஜவாஹர் அதன் காரியதரிசியராய் விளங்கினர்.

அப்பஞ்சாயத்துச் சபையின் முன்பு பற்பல ஆலோசனைகளைச் சொல்லி நின்றார் மகாத்துமா காந்தி. அவை நவீனமாயும் புதுமையாயும் இருந்

தன. சபையார் அவற்றை ஏற்கத் தயங்கினர். உடனே காந்தி தமது சொல்திறனும் சத்தியவாதமும் கொண்டு அவற்றை அனைவரும் ஏற்கச்செய்தார். காரியதரிசியாரான ஜவாஹருக்கு அது கண்டு மலைப்பும் மதிப்பும் ஓங்கிவளர்ந்தன. உடனே அவரையே பின் பற்றி நடக்க வேண்டும் என்று ஜவாஹர் நினைத்தார்.

'பஞ்சாபு படுகொலைக்கும் பரிகாரம் வேண்டும்; சுயராஜ்யமும் பெறவேண்டும்,' என்று ஒத்துழையாப் போர் முறை தொடங்கினர் மகாத்துமா. அப்போது காந்தி பத்தராக நடக்க ஜவாஹர் முன் வந்தார். காந்தியின் பேச்சு, திட்டவட்டமாயிருந்தது. அதில் அன்பு மிளிர்ந்தது; சாந்தம் தவழ்ந்தது. அனைவரும் அதில் ஆழ்ந்து போயினர்.

'காந்தி அடக்கமும் அமைதியும் நிறைந்த மனிதராய்த் தோன்றினும், அவர் சொல்லிலே வேகமும், விருவிருப்பும், சத்தியும், தூய்மையும் ஆகிய அனைத்தும் தவழ்ந்தன. ஆதலின், அவரை நான் ராஜதந்திரியெனக் கொண்டேன். நானும் அக்குணங்களை அடைய விரும்பி நின்றேன்,' என்கிறார் ஜவாஹர்.

தந்தையாருடன் சேர்ந்து ஏழாண்டு வழக்கறிஞர் தொழிலை நடத்திய காலையிலே, அங்குள்ள ஜமீந்தார்களின் பக்கம் ஜவாஹர் வழக்காடியிருக்கிறார். அப்போது ஜமீந்தார்களின் குணக்கேடுகள் அவருக்கு ஓரளவு புலப்பட்டன. 1920-ஆம் ஆண்டு காந்தியின் போர் முறை தொடங்கியதும், அதுபற்றி ஜவாஹர் ஐக்கிய மாகாணத்திலே கிராமந்தோறும் சென்று பேச நேர்ந்தது.

அது சமயம் உழவரின் குறைகள் அவருக்கு நன்கு தெரிய வந்தன. உடனே கசிந்துருகி அவர்

கண்ணீர் மல்கினர்; 'உழவரின் நிலையை உயர்த்த வேண்டும்,' என்பதை உணர்ந்தார்; 'தேச நிலை உயர, உழவரின் நிலை உயர்தல் வேண்டும்.' என்று கங்கணம் பூண்டார். பொதுக்கூட்டத்திலே பேசத் தயங்கிய அவரை விரைந்து பேச வைத்தவர்கள் அந்த உழவர்களே ஆவார்கள்.

அவருக்கு அன்று, அழகாக, ஆடம்பரமாகப் பேசத் தெரியாது. மனிதருக்கு மனிதர் பேசிக் கொள்வது போலவே ஹிந்தியில் பேசி வந்தார். 'சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்,' என்பர் அறிஞர். உழவரிடம் பேசிப் பேசி முடிவிலே பெரிய பேச்சாளர் ஆனர் ஜவாஹர். 1920-21 இந்த ஆண்டுகளில கிராமங்களுக்குச் சென்று, ஏழை உழவருடன் கனிந்து பேசுவதி லேயே ஜவாஹரின் காலம் கழிந்ததெனக் கூற வேண்டும்.

அங்கே உழவரின் இயக்கம் ஜவாஹரின் உழைப்பால் ஓங்கியது. 'நமக்கும் சத்தியுண்டு,' என உழவர்கள் நினைக்கத் தொடங்கினர்கள். குனிந்து குழைந்து நடந்தவர்கள் தலை நிமிர்ந்து நடக்கத் தைரியம் எய்தினர்கள்; ஜமீந்தார்கள் அநீதியாக நடந்தால், தட்டிப் பேசவும் கேட்கவும் தங்களுக்கு உரிமையுண்டெென உணர்ந்தார்கள்.

தேசத்தின் அந்நாள் நிலையையும், பழைய பெருமையையும் நினைத்துப் பார்க்கையில், அஹிம்ஸை மார்க்கமே உயர்ந்தது, சத்திய நெறியே சாலச் சிறந்தது என்று நம்பிய ஜவாஹர், அவ்விரு கொள்கைகளையும் எங்கும் பரப்பி வந்தார். அதனல், உழவரிடத்திலே என்றுமில்லா ஒற்றுமையும் மனவலியும் வளர்ந்தோங்கின.

நெஞ்சிடிந்த மக்கள் நிமிர்ந்து நடத்தலையும் நேர்மையுடன் இருத்தலையுங் கண்டு, அதிகாரிகள் பிரமித்தார்கள்; பயந்தார்கள்; ஜவாஹரின் ஊழியங் கண்டு ஒரு பக்கம் உள்ளம் உவந்தார்கள்; ஒரு பக்கம் உள்ளம் உடைந்தார்கள்.

இயக்கம் உதித்தநாள் தொட்டுக் குடும்பத்தையும் உல்லாசத்தையும் ஜவாஹர் மறந்தார்; தேச வேலையிலே முனைந்தார்; வயற்காடுகளிலே தங்கு தடையின்றி நடந்து சென்றார்; ஏழைகளின் பால் இரக்கம் மிகுந்தார்; கிராம வாழ்வே கண்ணிய வாழ்வெனக் கருதினர்; சொல்லிலும் செயலிலும் ஒழுங்கே அவசியம் என்பதை உணர்ந்தார்.

## 8. அரச விருந்தாளி

காந்தியின் சத்திய இயக்கம், 1921-ஆம் ஆண்டில் உதித்தது. வாக்காளருட்பலரும் சட்ட சபைத் தேர்தல்களை வெறுத்தனர்; வக்கீல்களோ, வழக்கு மன்றங்களை விட்டு விலகினர்கள். மாணவரும் பள்ளிச்சாலைகளைத் துறந்து வெளியே வந்தனர். சத்தியப் போரை நாடும் நகரமும் நன்கு அறிந்துகொண்டன.

அந்த ஆண்டு நம் தேச சரித்திரத்திலே முதன்மை கொண்ட முதல் ஆண்டாம். அத்தறுவாயிலே, சுதந்தர தேவி நகைமுகம் காட்டினள்; பாரத ராணி துயில் நீங்கித் துடித்து எழுந்தாள். ஆயிரக்கணக்கிலே தலைவர்களும் தொண்டர்களும், சிறைகளிலே அரசரின் விருந்தாளிகள் ஆனர்கள். அவர்களுள் ஜவாஹரும் ஒருவர்!

காட்டு வெள்ளம் போல இயக்கம் பொங்கிப் பரத்தல் கண்டு, ஆங்கில அரச குமாரரை அதிகார

வர்க்கம் இந்தியாவுக்கு வரவழைத்தது; இளவரசரைக் கண்டால் இந்திய மக்கள் இயற்கையான ராஜபத்தி மேலிட்டு, இயக்கத்திலிருந்து விலகி விடுவார்கள் என்பதே அவ்வர்க்கத்தின் மனக் கருத்தாம்.

'இளவரசர் வருங்கால், எல்லாரும் கடைகளை மூடி, வேலைகளையெல்லாம் நிறுத்தி, வீட்டுக்குள்ளேயே இருத்தல் வேண்டும்,' என்று காந்திமகான் ஆணையிட்டார். ஆகவே, ஆங்கில இளங்கோ எங்கே சென்றாலும், தெருக்களிலே காக்கை குருவிகளும் தென்படவில்லை. எங்கும் உயிரற்ற நகரையே அக்கோமானர் கண்டு, உள்ளத்தூடே சலிப்புக் கொண்டார்.

அங்கிலையை உண்டுபண்ணி வந்த மோதிலாலையும் ஜவாஹர்லாலையும் அதிகாரிகள் சிறைக்குள் தள்ளினார்கள். தலைவர்களைக் காவலில் இட்டதனால், இயக்கம் சிறிதும் தளரவில்லை; மிகவும் வலுத்தது. 'இளவரசருக்கு வரவேற்பு இல்லை,' என்னும் எழுத்தும் கோஷமும் எங்கும் மலிந்தன.

'இலட்சுமணபுரி நகரின் சிறைக்குள்ளே ஜவாஹர் ஆறு மாதம் கிடக்க வேண்டும்,' என்று தீர்ப்புப் பிறந்தது. தம் தந்தையார், பெரிய தகப்பனார் புதல்வர் இவர்களுடன் ஜவாஹர் சிறை வாசம் புரிந்தார். காலையிலே துயில் எழுந்ததும், அவர் தாமும் பிறரும் வதியும் இடத்தை நன்கு சுத்தம் செய்வார்; தமது உடையையும், தந்தையாரின் உடையையும் துவைத்து உலர்த்துவார் கைராட்டையிலே நூல் நூற்பார்; பின்பு, தொண்டர்களுக்கு அரசியல் பாடம் புகட்டுவார்; அன்பர்களுடன் தேச விஷயமாக அளவளாவுவார்.

வேண்டுவாருக்கு ஹிந்தியும் உருதுவும் கற்பிப்பார்; மாலை வேளைகளிலே பொழுது போக ஒரு சிறிது விளையாடுவார். சுகபோகத்தில் திளைத்தவர் சிறை வாச நிலையைக் குறித்து வருந்தவில்லை.

ஆறு மாதம் தண்டிக்கப் பெற்றும், மூன்று மாதத்திலேயே ஜவாஹருக்கு விடுதலை கிட்டியது. கிட்டியதும், 'அன்னிய ஆடைகளை வாங்குவதில்லை,' என்று வாக்களித்திருந்த ஜவுளி வர்த்தகரை அவர் கண்டு பேசி, ஊக்கம் ஊட்டினர்; வாக்குறுதியில் தவறுபவரின் கடைகளை மறியல் செய்யவும் வழி கோலினர். அது கண்ட அதிகாரிகள் கோபங் கொண்டு குதித்தார்கள்.

அதன் விளைவாக, மறுபடியும் அவரை அதி காரிகள் கைது செய்து, வழக்கு நடத்தினர்கள். அப்போது அவர் கொடுத்த வாக்கு மூலத்தின் சுருக்கம் இது:

"நீதியான நோக்கம் கொண்டு அமைதியாக மறியல் செய்தல் குற்றமா? குற்றம் என்றால், நான் குற்றவாளிதான். குறித்த ஒரு செயலைச் செய்யவோ செய்யாதிருக்கவோ பிறரை வேண்டிக் கொள்ள எங்களுக்கு உரிமை உண்டு.

"நாங்கள் எங்கள் தேசத்திற்காகப் போராடு கிறோம். பிற நாட்டாருக்குத் தீங்கு செய்தல் எங்கள் நோக்கமுமன்று; விருப்பமும் அன்று. இந்தியாவின் நேசத்தை விரும்பினல், இங்கிலாந்து தன் பாவங்களைப் போக்கிக்கொள்ள வேண்டும். உண்மையிலே சிறைவாசம் எங்களுக்கு அமரவாச மாகிவிட்டது! இந்தியா விடுதலை பெறும் என் பதில் இம்மியும் ஐயமில்லை!

"எனக்குக் கிட்டியுள்ள பேறு கண்டு, யான் பெரிதும் களிக்கின்றேன்! சுதந்தரப் போரிலே இந்தியத் தாய்க்குப் பணி புரிதல் ஒரு பேறு அல்லவா? அதிலும் காந்தியின் தலைமையில் பணி புரிதல் அப்பேற்றினை இரட்டிப்பாக்கும்! அன்புக் குரிய தேசத்திற்காக வாடி வதங்குதல் எம்மாத் திரம்! அது பற்றி எங்கள் ஆருயிரை வழங்குவ தினும் அரிய பேறு உண்டோ?"

இவ்வாறு வாக்கு மூலம் கொடுத்த பின், அவ ருக்கு ஒன்றரை வருஷம் தண்டனை விதிக்கப் பெற்றது. இரண்டாவது முறை அவர் சிறை புகுந்த காலத்திலே, நடுத்தர வகுப்பைச் சேர்ந்த தேசபத்தர் பலர், சிறையிற்கிடந்து உழன்றனர். சிறைவாசத்தை அவர்கள் விரும்பி ஏற்றுக்கொண் டாலும், சிறை வாச நிலைமையும் கொடுமையும் அவர்களால் தாங்க முடியவில்லை.

அது பற்றி வீர தேசபத்தன் முணுமுணுத் தால், அவனைத் துன்புறுத்துதல் சிறையதிகாரி களின் வழக்கம். இளைஞனொருவன் மிகவும் அற்பமான குற்றமொன்று செய்தான். அதனைக் குற்றமெனல் பொருந்தாது. ஆயினும், அதிகாரி கள் சீறி எழுந்தார்கள்.

சுருங்கச் சொன்னால், அந்த இளைஞனை அம் மணமாக்கி, முக்கோணத்திலே கட்டி நிறுத்திக் கொண்டு, பிட்டத்திலே சவுக்கால் அடித்தனர்; சுரீர் என்று அடி வந்து தாக்கியதும், 'மகாத்துமா காந்திக்கு ஜே!' என்று அவன் கோஷம் செய்தான்.

மயங்கி மெய்மறந்துபோகும் வரையில் அவனை அதிகாரிகள் அவ்வாறு அடித்து வந்தார்கள். பின்னாளிலே, வெடிகுண்டு வீசும் புரட்சிக் கூட்டத் தின் தலைவன் ஆனான் அவ்விளவல்.

# 9. விலங்குடன் வீதி வலம்

பதினெட்டு மாதம் தண்டனை விதித்தும், ஒன்பது மாதத்துக்குள் ஜவாஹரை அதிகாரிகள் விடுவித்தார்கள். மீண்டும் அவர் தேசப்பணியில் முனைந்து, டில்லியில் நடந்த காங்கிரசுக்குச் சென்று திரும்பினர். அப்போது நாபா சமஸ்தானத்திலே அதிகார ஆணவம் தாண்டவம் ஆடுவது அவருக்குத் தெரிய வந்தது.

பஞ்சாபு மாகாணச் சம்ஸ்தானங்களில் இரண்டு பாட்டியாலா, நாபா எனப்படும். இரண்டுக்கும் இடையே பகை முற்றி, வைரம் பாய்ந்தது. பாட்டியாலாவின் பக்கம் அதிகாரவர்க்கம் பரிந்து நின்று, நாபா மகாராஜாவை அரியணையிலிருந்து அகற்றி விட்டது. அதனல், நாபாவிலும் அதற்கு வெளியிலும் பெருங்கிளர்ச்சி தோன்றியது.

நாபாவிலே ஜெயிதோ என்னும் ஒரு சிறிய நகரம் உண்டு. அந்நகரிலுள்ள சீக்கிய குருத்துவாரத்திலே சமய விழா ஒன்று நடைபெற்று வந்தது. கிளர்ச்சிக்கு அஞ்சிய சம்ஸ்தான அதிகாரி, அவ்விழாவை நிறுத்திவிட்டார். 'சமய விழாவை நிறுத்துவதா!' என்று பஞ்சாபு சீக்கியர் பெரிதும் சினம் பூத்தனர்.

அது பற்றி, அச்சீக்கியர் ஒருபதின்மரை அனுப்பி, அவ்விழாவை நடத்த ஏற்பாடு செய்தனர். அந்நகரின் எல்லை சேர்ந்ததும், அப்பதின்மரை நையப்புடைத்து, மோட்டாரில் ஏற்றி, இரவு நேரத்திலே நடுக்காட்டில் கொண்டு போய் விட்டுவிடுதல் அதிகாரிகளின் வழக்கம். சீக்கியர் அதற்குச் சளைக்காமல், மேலும்மேலும் பலரை அனுப்பி வந்தனர்.

அச்செய்தியை ஜவாஹர் அறிந்தார். நேரில் சென்று பார்க்கவேண்டும் என்று அவருக்கு ஆவல் மிகுந்தது. அவ்வாறே பார்த்தறியும் வண்ணம் சீக்கியத் தலைவர்களும் அவரை வேண்டிக்கொண்டார்கள். தம் தோழர்களான கித்வானி, சந்தானம் என்பவர்களுடன் பண்டிதர் பயணமானார்.

எல்லாரும் ஜெயிதோ நகரம் சேர்ந்தனர். சீக்கியரின் குழுவோ, முன்னதாகச் சென்றது. அதற்குப் பின்னே வெகு தொலைவில் சென்றார் பண்டிதர். அப்போது, நாபா போலீஸ் அதிகாரி ஒருவர் தோன்றி, ஜவாஹரிடம் ஓர் உத்தரவை நீட்டினார். அதில் 'நாபா எல்லைக்குள் நீங்கள் காலடி வைத்தல் கூடாது. வைத்திருந்தால், உடனே நாபா எல்லையைத் தாண்டிப் போய்விடவேண்டும்,' என்று கண்டிருந்தது.

பண்டிதர் அந்த உத்தரவைப் பார்த்ததும், "நாபா எல்லைக்குள்ளேதானே இருக்கிறோம்! எனவே, 'எல்லைக்குள் காலடி வைக்கக் கூடாது,' என்பதில் அர்த்தம் ஏது? நாபா எல்லையை விட்டுப் போகவேண்டுமானால், அடுத்த இரயில்வண்டி புறப்பட வெகுநேரம் இருக்கிறதே! இடையிலே என்ன செய்வது? அச்சீக்கியருக்கும் எனக்கும் தொடர்பு இல்லையே!" என்று அதிகாரியிடம் சொன்னார்.

போலீஸ் அதிகாரி அதனை மதியாமல், அம் மூவரையும் சிறை செய்து, ஓர் அறையில் அடைத்து வைத்தார்; பிறகு அச்சீக்கியரை வழக்கம் போலச் செம்மையாக அடித்து, நடுக்காட்டில் கொண்டு போய் விட்டார். இதற்குள் மாலைப்பொழுது கிட்டி விட்டது.

ஜவாஹரையும் சந்தானத்தையும் கையோடு கைபிணைத்து, அதிகாரிகள் விலங்கிட்டார்கள். அவ் விலங்கிலிருந்து நீண்ட சங்கிலியொன்று தொங்க, அதனைப் பிடித்துக்கொண்டு, போலீஸ்காரன் முன்னே நடந்தான். அவன் பின்னே இருவரும் நடந்து செல்ல நேர்ந்தது. கித்வானியையும் அவ் விதமே கை விலங்கிட்டு, மற்றொருவன் நடத்திச் சென்றான்.

ஜெயிதோ நகரின் வீதியிலே அவ்வாறு மூவரை யும் போலீஸார் நடத்திச் சென்றனர். 'சங்கிலி பூட்டி நாயை இழுத்துச் செல்வது போல, நம்மை இழுத்துச் செல்கின்றனரே!' என்று முதலிலே மூவரும் சிறிது கோபங்கொண்டனர்; பின்போ, 'அதிகாரிகளின் இத்திருவிளையாடலையும் கண்டு களிப்போம்!' என்றே களித்துச் சென்றனர். அடிமைத் தேசத்துக்குப் பணி புரிவதில் எத்தனை யோ அவமதிப்புக்கு ஆளாகவேண்டும் அல்லவா?

இரவு புகுந்ததும், போலீஸார் அம்மூவரை யும் ஒரு ரயில் வண்டியிலே ஏற்றினர்; மறுதினம் பகல் பன்னிரண்டு மணிக்கு நாபா நகரம் போய்ச் சேர்ந்தது அவ்வண்டி. ஜவாஹரின் வலக்கை, சந்தானத்தின் இடக்கை இரண்டையும் பிணைத்து விலங்கு போட்டிருந்தனர்.

ஓர் இரவும் பாதிப் பகலும் அந்நிலையிலுள்ள இருவரும் எவ்வாறு இங்குமங்கும் நகர்வது? எவ் விதம் படுத்து உறங்குவது? எங்ஙனம் சிறுநீர் கழிப் பது? எவ்வாறு உண்டு, உண்ணீர் கொள்வது? நாபா நகரின் சிறைக்கூடம் சேர்ந்ததும், கைவிலங் கைக் கழற்றினர். அன்று இரவிலே மூவரும் வெறுந்தரையில் படுக்க நேர்ந்தது. அந்த அறை யோ, அழுக்கின் இருப்பிடம்.

இரவிலே தூங்குகையில், ஜவாஹரின்மீது சுண்டெலிகள் துள்ளிக் குதிக்கும். சுருங்கச்சொன்னால், அப்பால் விசாரணை என்று ஒன்று நடந்தது. அதனை நடத்திய அதிகாரிக்கோ, விசாரணை என்பது இன்னது என்பதே தெரியாது. நீதிபதியை அங்கே போலீஸார் ஆட்டிப் படைத்தனர்; அடிக்கவும் புகுந்தனர். அதுசமயம் ஜவாஹர் குறுக்கிட நேர்ந்தது.

முடிவிலே இரண்டரை வருஷம் தண்டனை கிட்டியது அம்மூவருக்கும். சிரித்த முகத்துடன் அதனை அம்மூவரும் ஏற்றுக்கொண்டனர். அத்தண்டனை கேட்டு உலகம் சிரித்தது. அதிகாரிகளும் வெட்கங் கொண்டார்கள். சின்னாள் சென்றதும், அம்மூவரும் விடுதலையடைந்தனர்.

## 10. வேலிமீது பாய்தல்

அலகபாது நகருக்கு அருகே, கங்கை, யமுனை, சரசுவதி ஆகிய மூன்று நதிகளும் கூடுகின்றன. அதனைத் திரிவேணி சங்கமம் என்பர். பன்னீராண்டுக்கு ஒரு முறை நிகழும் கும்பமேளா முழுக்கு நாளில் பத்து லட்சக்கணக்கான மக்கள் அங்கே நீராடுதல் உண்டு. அது சமயக் கடமையுமாம்.

காசி மாநகரிலே பல்கலைக் கழகத்தை நிறுவிய பண்டித மதன் மோகன் மாளவியா சமயப் பற்று மிகுந்தவர். நீராட வரும் மக்களுக்கு உரிய வசதி அனைத்தையும் அவர் தேடி அமைப்பார். 1924-ஆம் ஆண்டிலே அத்தகைய முழுக்கு நாள் வந்தது. கணக்கில்லாத மக்கள் வந்து கூடிவிட்டார்கள்.

அப்போது நதியிலே வெள்ளம் அதிகம்; வேகமும் மிகுதி. ஆதலின், யாரும் நீராடக்கூடாது என்று அதிகாரிகள் ஆணை பிறப்பித்தார்கள்; நீராடும் துறைக்குப்போகும் வழியிலே மிகப் பெரிய மரவேலியும் போட்டுவிட்டார்கள். போலீஸ் வீரரையும் இராணுவ வீரரையும் காவலுக்கு நிறுத்திவைத்தார்கள்.

பண்டித மாளவியா அஃது அறிந்து, இருநூறு தொண்டர்களுடன் சென்று, அம்மரவேலிக்கு முன்னே தரையில் உட்கார்ந்து சத்தியாக்கிரகம் செய்யலானார். பத்திரிகைகளில் அதனைப் படித்ததும், பண்டித ஜவாஹர் வேடிக்கை பார்க்கப் போனார் அவ்விடத்துக்கு.

அதிகார தடபுடலையும் மாளவியாவின் அமைதியையும் கண்டவுடனே, ஜவாஹர் தம்மை மறந்து, தாமும் ஒரு தொண்டராய் மணலிலே அமர்ந்துகொண்டார். உச்சிப்போது நெருங்க நெருங்க, மணலின் சூடு அதிகரித்தது; தாகமும் பசியும் எழுந்தன. எத்தனை நாழிகை இவ்விதம் வீற்றிருப்பதென அவர் பதைபதைத்தார்.

மரவேலியோ, ஆளுயரத்திற்கு மேலிருக்கும். தொண்டரின் இருமருங்கிலும் இராணுவவீரர் ஆயுதங்களுடன் நிற்கின்றனர். அக்காட்சியைக் கண்டு ஜவாஹர் பொறுக்கவில்லை. அவ்வளவில், அவர் எழுந்து சென்று, அப்பெரிய மரவேலியின் உச்சிமீது தாவி அமர்ந்தார். இதற்குள் தொண்டனொருவன் தேசீயகொடியொன்றை அவரிடம நீட்டினன்.

அதனை அவர் அவ்வேலியின் உச்சிமீது நாட்டி வணங்கினர். இரண்டு மூன்று தொண்டரும் அவ

ரைப் பின் பற்றினர். எல்லாம் கண்ணிமைப் பொழுதிற்குள் நடந்தேறின. இதற்குள் இராணுவ வீரர் சீறி வந்தனர். அவர்களைப் பார்த்துச் சிரித்த வண்ணம், வேலிக்கு அப்பால் குதித்தார் ஜவாஹர், வெயிலின் கொடுமை தணியவேண்டி அத்திரிவேணி சங்கமத்தில் நீராடி வந்தார்.

சுடும் மணலில் மாளவியா சும்மா உட்கார்ந் திருத்தலை நோக்கியதும், ஜவாஹருக்கு இரக்கமும் திகைப்பும் மேலிட்டன. உடனே மாளவியாவின் பக்கத்தில் அவரும் அமரிக்கையாய் அமர்ந்தார். பகற்போது கழிந்து, பிற்பகல் புகுந்தது. காத்து நின்ற குதிரை வீரர் தடபுடல் பண்ண ஆயத்தமா யினர்.

அவ்வீரர் வந்து தொண்டரைத் தாக்குவரென ஜவாஹர் நினைத்தார். இதற்கிடையில், எட்ட நின்ற ஜனக்கூட்டமும் பரபரப்புக்கொண்டது. எல்லாம் உணர்ந்த மாளவியா, தமது தள்ளாத வயதிலே திடீ ரென எழுந்து எதிர்த்து நிற்கும் குதிரை வீரரின் இடையே தந்திரமாகப் பாய்ந்தார். தொண்டரும் சந்து கண்ட இடத்தில் நுழைந்தனர்.

இதற்குள் மரவேலியிலே இங்கொன்று அங் கொன்றாகச் சில மரத்துண்டுகளை மக்கள் பிடுங்கி எறிந்தார்கள். வேலியிலே வழி கண்டதும், எல்லா ரும் அதனூடே புகுந்து, துறை குறுகி, ஆற்றில் இறங்கி, ஆனந்தமாக நீராடினர். காவல் புரிந்து நின்ற போலீஸாரும் இராணுவத்தாரும் மக்களைத் தடுக்கப்பார்த்தும் முடியாமல் திரும்பிவிட்டனர்.

இரண்டொருவருக்கு அற்பமான காயம் ஏற் பட்டது. அவ்வளவுதான்! மேற்கொண்டு அதிகாரி

கள் ஒன்றும் செய்யவில்லை. 'முதுமையும் நோயும் காரணமாக உடல் நலிந்திருந்தும், காலை முதல் மாலை வரையில் சுடுமணலிலே மாளவியா அமர்ந்திருந்ததும், அப்பால் விரைந்தெழுந்து வீரரின் நடுவே துள்ளிப்பாய்ந்ததும், தீரத்துடன் கடுகிச் சென்று நீராடியதும், நினைக்க நினைக்க ஆச்சரியமேயாகும்!' என்று ஜவாஹர்லால் நேரு எழுதியிருக்கிறார்.

மரவேலியைத் தாண்டிச் சென்றது பற்றி அதிகாரிகள் வழக்குத் தொடுப்பார்களென ஜவாஹர் எதிர் பார்த்தார். மாளவியாவின்மீது வழக்குத் தொடுக்க அவர்கள் துணியவில்லை. அதனால், தொண்டரும் பிறரும் வழக்கில் சிக்காமல் தப்பினர்.

'சமயமாவது! சடங்காவது!' என்று சில சமயங்களில் ஜவாஹர் பேசுவார். 'அவர் ஹிந்துவா, முகம்மதியரா!' என்று சிலர் ஐயமுறுவதும் உண்டு. சமயத்திற்கு உரிய அடையாளங்களில் அவருக்குப் பற்றுதல் இல்லை. ஆனாலும், ஒழுக்கத்தில் அவர் உயர்ந்தவர்; நீதியும் நேர்மையும் மிகுந்தவர் என்பதை எல்லாரும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

தாம் சுற்றிப் பார்க்கும் இடங்களிலே சமயச் சின்னங்களான அற்புதச் சிலைகளைக் கண்டால், ஆலய அமைப்பின் நேர்த்தியைப் பார்த்தால், சிற்பங்களின் சிறப்பை நோக்கினால், அவர் சிறிது நேரம் தம்மை மறந்து அவற்றை ஊடுருவி நோக்கி, உள்ளத்திலே ஓர் இன்பம் கொள்வார். அதனை அவரது முகமே கண்ணாடிபோல எடுத்துக் காட்டும்.

# 11. வீறிட்டெழுதல்

காந்தி மகான் தோன்றி, சத்தியப் போர்முரசு கொட்டுமுன், தேசமக்கள் இருந்த நிலைமை யாது? தேசீயக் கவிஞரான பாரதியாரின் வார்த்தையில் விளம்புவதானல், சிப்பாயைக் கண்டஞ்சுவார்; ஊர்ச்சேவகன் வருதலைக் கண்டு மனம் பதைப்பார்; துப்பாக்கி கொண்டு ஒருவன் தூரத்தே வரக் கண்டால். வீட்டிலே புகுந்து ஒளிந்துகொள்வார்; எப்போதும் கைகட்டியே நிற்பார். இம்மட்டோ?

'கஞ்சி குடிப்பதற்கிலார்—அதன்
காரணங்கள் இவையென்னும் அறிவும்இலார்;
பஞ்சமோ பஞ்சம்என்றே—நிதம்
பரிதவித் தேயுயிர் துடிதுடித்துத்
துஞ்சி மடிகின்ருரே!—இவர்
துயர்களைத் தீர்க்கவோர் வழியில்லையோ?'

இவ்விதம் தேம்பிச் சோம்பிக் கிடந்த தேசம், தெம்புடன் எழுந்து, தோள் தட்டிச் சுதந்தரப் போரிலே குதித்தது. ஏறக்குறைய ஓர் இலட்சம் பேர் வீறிட்டெழுந்து சிறைக்கோட்டம் நண்ணினர். அத்தகைய வீறுப்புக்கும் விழிப்புக்கும் காரணமான மகாத்துமா காந்தியை அதிகாரிகள் தொடவில்லை.

தினம்தினம் அப்பெருமான் புதிய புதிய அறிக்கை வெளியிட்டுப் போரை நடத்தி வந்தார். அந்த அறிக்கை கண்டு, மக்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஓங்கின; ஒழுங்கும் கட்டுப்பாடும் உருவாயின. தேசம் ஒரு முகமாகத் திரண்டு நின்றது. அதுகண்ட அரசாங்கத்துக்கு அச்சமே மிகுந்தது. அவரைக் கைதி செய்தால், பேராபத்து நேரும் என்பதே அரசாங்கத்தின் சிந்தனையாம்.

அங்கிலேயிலே ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த சௌரிசாரா என்னும் இடத்தில் ஜனங்களிலே ஒரு சிலர் இரண்டு மூன்று போலீஸாரைக் கொன்று போட்டனர். அது அறிந்ததும், அஹிம்ஸைக்குத் தேசம் இன்னும் தயாராகவில்லை என்று காந்தி மகான் கூறி, அச்சத்தியப் போரை நிறுத்தி விட்டார்.

உள்ளமும் உடலும் ஒருங்கே நடுங்கிக் கிடந்த அரசாங்கத்துக்கு அப்போர் நிறுத்தம் பேராறுதலை அளித்தது. காந்தியைக் கண்டு கலங்கிக் கிடந்த அந்த அரசாங்கமோ, அப்பால் அவரைக் கைது செய்து ஆறு வருஷம் காவல் தண்டனை விதித்தது. அதுசமயம் சிறையில் கிடந்த ஜவாஹர் உட்படத் தலைவர் பலரும் காந்தியின் செயலைக் கேட்டுக் கடுங்கோபம் கொண்டனர்.

'சுதந்தர தேவி தோன்றி, நகைமுகம் காட்டும் தறுவாயிலா போரை நிறுத்துவது!' என்பதே பலரின் வருத்தமாகும். எதிரிக்குத் துன்பம் எதுவும் நினைப்பதுமில்லை என்பதே மகாத்துமாவின் கோட்பாடாகும். அதனை அஹிம்ஸைக் கொள்கை என்பர். அஹிம்ஸை என்பது சபதம் போன்ற கொள்கை ஆகுமா? சமயக் கோட்பாடு போன்றதும் ஆகுமா? இது பற்றி ஜவாஹரின் கருத்து யாது?

"சௌரிசாரா சம்பவம் அஹிம்ஸைப் போரின் வளர்ச்சிக்கு ஒத்ததன்றுதான். ஆயினும், எங்கேயோ ஒரு மூலையில் ஒரு சிலர் தவறி நடந்தால், அதற்காகச் சுதந்தரப் போரை நிறுத்திவிடுவதா? முப்பது கோடி மக்களும் சிந்தை, செயல் இவற்றில் அஹிம்ஸை கொள்ள முடியுமா? கொள்ளும்படி நம்மால் ஆக்க முடியுமா?

"போலீஸார் நம்மை வேண்டுமென்று குத்திக் கிளப்பும்பொழுது, நம்மில் எத்தனை பெயர் வெகுளி கொள்ளாதிருக்க முடியும்? 'எந்த நிலையிலும் சினம் என்பது தோன்றக்கூடாது,' என்றால், அஹிம்ஸைப் போர் என்பது தவறத்தான் செய்யும். அஹிம்ஸை என்பது நோன்பு போல, சபதம்போல ஒரு கொள்கையாய் இருத்தல் ஒண்ணாது.

"தனிப்பட்ட மனிதர் அஹிம்ஸை என்பதை மதக் கோட்பாடாகக் கொள்ளக்கூடும்; அதினின்று இம்மியும் பிறழக் கூடாது என்றிருக்க முடியும். அரசியல் நோக்கமுள்ள சபையும் சரி, சங்கமும் சரி, அரசியல் நோக்கம் கொண்டு நடக்கையில் அஹிம்ஸையை ஒரு நோன்பாகவோ சபதமாகவோ கொண்டிருக்க இயலாது!"

அஹிம்ஸையைக் குறித்து ஜவாஹரின் மெய்க் கருத்து அதுவேயாகும். சத்தியப் போர் இயக்கத்தை மகாத்துமா நிறுத்தியிராவிட்டால். அந்த இயக்கமானது கோரிய பலனை எய்தியிருக்கும். அரசாங்கமும் அந்த இயக்கத்தைத் தனது வல்லமை கொண்டு நிறுத்தியிருக்க முடியாது என்பதே தலைவர்களின் கருத்து.

ஒத்துழையாப் போர் ஓங்கி நின்ற காலையிலே அரசாங்கத்துக்கு ஆதாரமான போலீஸ் என்ன-இராணுவம் என்ன-இந்திய அதிகாரிகள் என்ன-எல்லாரும் தேச ஆவேசத்துக்கு ஆளாகித் தத்தளிப்பான நிலையில் இருந்தனர்; 'அன்னிய அரசாங்கத்துக்கு உண்மை ஊழியம் புரிவதாயின், அது தேச நலனுக்குத் தீங்காய் முடியும். அவ்வாறு தீங்கு புரிவதா?' என்பதே தத்தளிப்பின் காரணமாகும்.

ஒப்பற்ற தலைவரைச் சிறைக்குள் தள்ளிய வுடனே, தேசம் திகைப்புக் கொண்டுவிட்டது. இதர தலைவர்களும் சிறைக்குள்ளே கிடக்கையில், தேச நலத்தை மதியாமல், சுயநலத்தையே மதித்து நின்ற நபர்கள், தலையாட்டம் கொண்டுவிட்டார்கள். நாளடைவிலே தேச மக்களை அலுப்பும் சலிப்பும் சூழ்ந்துகொண்டன. இங்கிலேயில், 'ஏன் என்று கேட்பார் யார்?' என்று அதிகார வர்க்கம் இறு மாப்புக்கு ஆளாகிவிட்டது.

## 12. சமூக சேவை

பண்டித ஜவாஹர்லால் 1922-ஆம் ஆண்டு சிறையிலிருந்து வெளி வந்ததும், சத்தியப் போர் நின்றுவிடவே, தேச நிலைமை மாறி விட்டது. ஆயினும், காந்தியே தலைவர் என்று ஜவாஹர் கொண்டிருந்தார். சிறையிலே கிடந்த மையால், அவரைக் கண்டு பேச ஜவாஹரால் முடியவில்லை. எனினும், காந்தியின் திட்டங்களைத் தமக்குள்ளேயே அவர் ஆராய்ச்சி செய்து நின்றார்.

சட்டசபை விலக்கு, சத்தியப் போர் முறை யின் முக்கியக கூறுகளில் ஒன்று அல்லவா? அதனால், அதிகார வர்க்கத்தின் செல்லப்பிள்ளை களும் கைப்பொம்மை போன்றவர்களும் திறந்த வீட்டில் திருடன் நுழைவதேபோல அக்கோட்டை களில் புகுந்து அதிகார வர்க்கத்தின் செயல்களுக் கெல்லாம் ஒப்பங் கொடுத்து நின்றார்கள்.

அது பற்றி நம் தேசத்திற்குப் பெருங்கேடு விளையலாயிற்று. சிறையிலிருந்து வெளி வந்த சித்தரஞ்சன தாஸர் அக்கேட்டினையுணர்ந்து வருந்தி னர்; சர்க்காரின் கோட்டையான சட்டசபைகளைக்

கைப்பற்ற வேண்டும் என்று முடிவு கட்டினர்; தேசத்திற்குத் தீங்கு விளைக்கும் சுயநலப் பூனை களை அங்கிருந்து விரட்டி ஓட்ட வேண்டும் என்று முனையலானர்.

பண்டித ஜவாஹரின் தந்தையாரான பண்டித மோதிலாலும் தாஸரின் கருத்தில் ஈடுபட்டார். ஆதலின், இருவரும் சேர்ந்து, தேசமெங்குஞ் சென்று, அத்துறையிற் கிளர்ச்சி செய்து வந்த னர். அது 'சுய ராஜ்யக் கட்சி இயக்கம்' எனப்படும். அதில் ஜவாஹருக்கு நம்பிக்கை இல்லை. ஆயினும், அதனை அவர் எதிர்க்கவில்லை.

காந்தி மகான் சிறையில் கிடக்கையில், அவ ரைக் கலந்துகொள்ளாமல், அவரது இயக்கத்தில் மாறுதல் செய்ய ஜவாஹருக்கு உத்தேசம் இல்லை. காந்தி இயக்கத்தில் மாறுதல் கூடாது என்றிருந்த கட்சியார் — தீவிர ஒத்துழையாதார் — அதனை எதிர்த்தனர். அத்தகைய ஜவாஹர் தமக்குத் தோன்றிய வகையில் சேவை செய்யவே கருதி நின்றார்.

இரண்டு வருஷம் சிறையில் இருந்த பின், மகாத்துமா காந்தி விடுதலை பெற்றதும், தேச நிலையை உணர்ந்து, சுயராஜ்யக் கட்சியினருக்கு ஆசி கூறினர். அரசியல் போர் எவ்வகையிலே னும் நடந்து வரட்டும் என்பதே காந்தியின் கருத் தாம். சட்டசபைப் போரில் நம்பிக்கை இல்லா தார், கதர் உற்பத்தி, மது விலக்கு, தீண்டாமை ஒழிப்பு இவற்றில் கவனம் செலுத்தி வந்தனர்.

அப்போது நகரசபை, ஜில்லாச் சபை முதலிய வற்றை நாம் கைப்பற்ற வேண்டும் என்பது ஏற் பட்டது. அவ்விதமே நகர சபைகளில் சிறந்த

தலைவர்கள் புகுந்தார்கள். கல்கத்தா நகரசபைக்கு சித்தரஞ்சன் தலைவர் ஆனார்; ஆமதாபாது நகர சபைக்கு வல்லபபாய் பட்டேல் தலைமை தாங்கினார். அவ்விதமே அலகபாது நகரசபைக்கு நம் ஜவாஹர் தலைமை ஏற்றார்.

ஏறக்குறைய இரண்டரை வருடகாலம் அத் தலைமையிலிருந்து ஜவாஹர் ஆற்றிய பணி மெச்சத் தகுந்தது. நகரசபை, ஜில்லாச் சபை இவற்றை 'ஸ்தல ஸ்தாபனங்கள்' என்பர். இவைகளெல்லாம் அரசாங்கம் ஆட்டி வைக்கிறபடியே ஆட வேண்டும். இவற்றில் வேலை செய்பவரோ, தம்மை ஜன ஊழியர் என்று கருதாமல், ஜனங்களின் எஜமானர் என்றே நினைத்து நடந்து வந்தனர்.

அரசாங்கத்திலும் அதன் அங்கமான நகர ஜில்லாச் சபைகளிலும் வேலை பார்ப்பவர் பொது ஜன ஊழியர் என்று சொல்லப்படுவர். அவர்களுக்குக் கிடைக்கும் சம்பளம் ஜனங்களின் வரிப் பணத்திலிருந்தே கொடுக்கப்படுகிறது. ஆதலின், அவர்கள் பொது ஜனங்களின் ஊழியர்களே யாவார்கள்.

அன்னிய ஆட்சி இங்கே நடந்து வந்த வரையில் அந்த உத்தியோகஸ்தர்களுட்பலரும் அரசாங்கத்தின் ஆணைப்படி ஜனங்களை ஆட்டிப் படைத்து வந்தனரேயன்றி, ஜனங்களுக்கு உண்மையில் ஊழியம் புரியவில்லை. ஜவாஹர் நகர சபையின் தலைவர் ஆனதும், அனைவரும் தம்மை ஜன சேவகர் என்றே கருதலாயினர்.

நகரசபை எது செய்தாலும், அரசாங்கத்தின் ஆதரவையும் அங்கீகாரத்தையும் பெற்றாக வேண்

டும் என்னும் சட்டமுண்டு. அங்கிலேயிலே அச் சபை கருதும் வண்ணம் உண்மையில் ஊழியம் புரிய எவராலும் முடியாது. இந்த நிலையை மாற்றி அமைத்த பெருமை ஜவாஹரைச் சாரும். அரசாங்க அதிகாரிகள் அடிக்கடி குறுக்கிடுவதும் அவரது தலைமைக் காலத்தில் மலையேறியது.

இனி, ஆங்கில ஏகாதிபத்தியம் நம்மைக் கட்டியாளும் உணர்ச்சியை மக்களுக்கு ஊட்ட வேண்டி, ஏகாதிபத்திய விடுமுறை நாள் என்று ஆண்டிலே ஒரு நாள் விடுமுறை வரும். அப்போது நகரசபை அக்கருத்தைவொட்டிக் கொண்டாட்டம் நடத்தும். அதனையொழித்து, திலகர் திருநாள், காந்தி திருநாள் என்னும் திருநாட்களை அவர் ஏற்படுத்தினர்; அந் நன்னாட்களைக் கொண்டாடி, தேசிய உணர்ச்சியை ஊட்டவும் வழி தேடினர்.

பெரிய அதிகாரிகளோ, கவர்னர்களோ, கவர்னர் ஜெனரல்களோ வந்தால், அவர்களை வரவேற்று நகரசபைகள் மிக ஆடம்பரமாக உபசாரம் நடத்தும். கவர்னர் ஜெனரல் வந்த போது அவருக்கு வரவேற்பு அளிக்க அச்சபை மறுத்தது; ஆனல், தேசத்தலைவர்களை வரவேற்று உயர்வாக உபசாரம் அளித்தது. கட்டாயமாக எல்லாச் சிறுவரும் படித்தாக வேண்டும் என்று அவர் ஒரு திட்டம் வகுத்தார்; தாய் மொழிக்கு ஆக்கம் தேடினர்.

அவ்விதமெல்லாம் நகரசபையை நடத்தி எல்லாருக்கும் ஜவாஹர் வழி காட்டினர். ஜவாஹரை 'அரசாங்க விரோதி, ஆபத்தான மனிதன்' என்று முன்பு வசைபேசிய பெரிய அதிகாரிகளே, அவரது நிருவாகத்தைக் கண்டு மனமாரப் பாராட்டினர்கள்.

# 13. மேனுட்டின் ஏகபோகம்

பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு 1916-ஆம் ஆண்டிலே டில்லி மாநகரில் திருமணம் நடந்தேறியது. அவரது வாழ்க்கைத் துணைவியராய் வாய்த்த தேவியார், ஸ்ரீமதி கமலா என்பவர். அம்மாதரசியாரும் செல்வச் சீமானுரின் அருமைப் புதல்வியார்.

இந்தியாவிலுள்ள பிரபுக்கள், பெருமக்கள், உயர்தர அதிகாரிகள், உரை மிகுந்த அறிஞர்கள் முதலிய பலரும் கடிமணத்திற்கு விஜயஞ்செய்து, அறுவகைச் சுவையும் நிரம்பிய உணவுண்டு, உள்ளம் பூரித்தனர்; மணமகனுரையும் மணமகளாரையும் வாழ்த்தி, அவர்களுக்கு விழுமிய பரிசும் அளித்தனர்.

இருபத்தேழாவது வயதிலே ஜவாஹர் இல்வாழ்க்கையை மேற்கொண்டார்; நான்காண்டுகள் அவ்வாழ்க்கையை இனிது நடத்தினுர்; பின்னர்த் தேசத்தின் அழைப்பை அறிந்து, தேசசேவையிலே மூழ்கிவிட்டார். 1920-ஆம் ஆண்டு முதல் வீட்டிலே சிலநாள், சிறையிலே பலநாளாக அவரது வாழ்நாள் கழிந்து வந்தது.

'தாரமும் குருவும் தலைவிதி,' என்பர்; 'நிதியும் கணவனும் விதியின் பயனும். முன்னை நல்வினையின் பயன், இருவரும் கருத்தொருமித்த காதலராய் வாழ்ந்து வந்தனர்.

1926-ஆம் ஆண்டில் ஸ்ரீமதி கமலா தேவியாருக்குக் காசநோய் கண்டது. உடனே ஐரோப்பாத்தேசஞ் சென்று அரிய மருத்துவம் தேடித்தர ஜவாஹர் கருதினுர்.

அப்போது, ஐரோப்பாவைச் சேர்ந்த பெல்ஜிய நாட்டிலுள்ள பிரஸ்ஸல்ஸ் நகரில் 'ஏகாதிபத்திய எதிர்ப்பு மகாநாடு' நடைபெற இருந்தது. மேனாட்டினர், தமது படைப்பலத்தையும் சூழ்ச்சித்திறத்தையும்கொண்டு, ஆசியா, ஆப்பிரிக்காக் கண்டங்களிலுள்ள கறுப்பு மனிதர்களை அடக்கியாண்டு வந்தனர்.

'வெள்ளை நிறத்தினரான மேனாட்டினர் ஆளப் பிறந்தவர்; கறுப்பு மனிதரோ, கைகட்டிச் சேவகம் புரியப் பிறந்தவர்,' என்பதே அம்மேனாட்டாரின் கொள்கை. நவீன நாகரிகத்திலும், மிருகப் பிராயமான பலத்திலும் தேர்ச்சி பெறாத கறுப்பு மனிதரோ, கடவுளே என்று அன்னாருக்கு அடங்கிக்கிடந்தனர் என்றே கூற வேண்டும்.

ஐரோப்பிய நாடுகள் பலவற்றினுக்கும் ஆசியா, ஆப்பிரிக்காக் கண்டங்களிலே பற்பல பிரதேசங்கள் அடிமைப்பட்டுக் கிடந்தன. அப்பிரதேசங்களின் நலபலங்களையெல்லாம் மேனாட்டார் பறித்துப் புசித்து, ஏகபோகமாய் வாழ்ந்து வந்தனர். சாறெல்லாம் வெள்ளையருக்கே உரியது; கறுப்பருக்கோ, சக்கைதான் உரியது.

'கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும கடல் ஞாலம்,' என்றார் ஒரு கவிஞர். மேனாடுகளிலே, மிக்க பணம் சேர்த்து வந்த முதலாளிகளோ, கிழக்குத் தேசங்களை அடிமைப்படுத்தி ஆண்டதுடன் நிற்கவில்லை; தங்கள் தங்கள் நாடுகளிலே பெரியபெரிய ஆலைகளையும் தொழிற்சாலைகளையும் நிறுவி, அங்குள்ள ஏழைத் தொழிலாளரைக் கசக்கிப் பிழிந்து, கர்வத்துடன் நடந்து வந்தார்கள். ஆங்காங்குள்ள அரசுகளும் அவர்களுக்கு அடங்கிக் கிடந்தன.

அவ்விதம் தனி ஆதிக்கம் செலுத்திவந்த நாடுகளில் இங்கிலாந்தை முதன்மையாகச் சொல்ல வேண்டும். இங்கிலாந்து ஒரு சிறிய தீவு. ஆனாலும், அதற்கு உலகெங்கும்—ஐந்து கண்டங்களிலும்—அநேக நாடுகள் சொந்தம். அந்நாடுகளின் அரசியல், பொருளாதாரம் எல்லாம் இங்கிலாந்துக்கே பயன்பட்டு வந்தன. தவிர, அத்தீவின் மக்களில் சிலரோ, நிறத்திமிரும்கொண்டு தருக்கித் திரிந்தனர்.

காந்தியின் சத்தியப் போர் தொடங்கிய நாள் தொட்டு, அந்நிலையை நம்மவர் நன்குணர்ந்து, தலை தூக்கி நின்று, அவர்களைத் தட்டிப் பேசி வந்தனர். வரவே, ஏகாதிபத்தியச் செருக்கை எதிர்த்து அடக்க மகாநாடு கூடுவதை நமது காங்கிரஸ் மகாசபை உணர்ந்துகொண்டது; ஐரோப்பாவுக்குச் செல்லும் ஜவாஹரைத் தனது பிரதிநிதியாகவும் அமைத்து, அதில் கலந்துகொண்டு தக்கது செய்ய ஆணையிட்டது.

பண்டித ஜவாஹர் அந்த ஏகாதிபத்திய எதிர்ப்பு மகாநாட்டில் உற்சாகத்துடன் கலந்து கொண்டார்; உலகின் பல பாகங்களிலே ஒடுக்கி அடக்கப்பட்டுக் கிடந்த நாடுகளின் பிரதிநிதிகளை நேரிற்கண்டு பேசி, அங்கங்குள்ள மக்களின் இழிநிலையைத் தெள்ளென அறிந்துகொண்டார்; தீவிரமாக இந்தியாவின் சுதந்தரத்தை நாடி நின்றமையால, இங்கே வாழ முடியாமல் ஐரோப்பிய நாடுகளில் வசித்து வந்த நம்மவரையும் பார்த்து மிக்க உணர்ச்சியும் ஆவேசமும் எய்தினர்.

அகில தேச ஏகாதிபத்திய எதிர்ப்புச் சபை ஒன்று அம்மகாநாட்டில் நிறுவப்பெற்றது. அச்சபைக்கு ஜவர் கௌரவத் தலைவராய் அமைந்த

னர். அவருள் ஒருவர் நம் ஜவாஹர்; உலகெங்கும் ஓங்குபுகழ் வாய்ந்த விஞ்ஞானப் பேரறிஞர் ஈன்ஸ் டீன் என்பவர் மற்றொருவர்; சீனாவிலே குடியரசை அமைத்தவரின் மனைவியாரான திருமதி ஸன்யாத் ஸேன் என்னும் நங்கையரும் ஒரு தலைவியராவர்.

மகாநாட்டின் மண்டபத்திலே பற்பல நாட்டுக் கொடிகளுடன் இந்தியாவின் தேசியக் கொடியும் அழகாய்ப் பறந்தது. கடந்த நூறு ஆண்டுகளாய் இந்தியாவை அழித்து வந்த பஞ்சங்களின் கொடுமையைக் காட்டும் படங்கள் பலவும் பார்ப்பவரின் கருத்தை உருக்கின. ஆங்கில வல்லரசு நம் போர் வீரரைக் கொண்டு பல நாடுகளைப் பிடித்த படக் காட்சியும் அங்கே காட்டப் பெற்றது. இவை எல்லாம் ஜவாஹரின் முயற்சியாலேயாம்.

அம்மகாநாட்டிலே பற்பல தீர்மானங்கள் நிறைவேறின. அவற்றுள், 'உலக விடுதலை உண்டாக வேண்டின், இந்தியா விடுதலையடைய வேண்டும்,' என்னும் தீர்மானம் முக்கியமானதாம். 'ஏகாதிபத்திய வளர்ச்சியையும் வாழ்வையுங்கொண்டு பலனடையும் பணம் படைத்த முதலாளி வர்க்கம் மிக்க தீமைக்கே இடமாம்,' என்பதையும் அம்மகா நாட்டினர் வற்புறுத்தினர்.

அந்நாளிலே ருஷியாவில் ஜாரின் ஆட்சியும் முதலாளி வர்க்கமும் அழிந்து, ஏழைகளின் இனிய ஆட்சி உதித்திருந்தது. அங்கே 'ஒரு சிலருக்கே சொத்துரிமை' என்பது மலையேறி, 'எல்லாருக்கும் சரி சமமான உரிமையுண்டு,' என்னும் பொது உடைமை அரசு முளைத்திருந்தது. அதில் ஜவாஹருக்கு ஈடுபாடு உண்டு.

ஆதலின், அவர் ருஷியா சென்று, அப்பொது உடைமை அரசின் நிலையைக் கூர்ந்தறிந்தார்;

ஏனைய ஐரோப்பியத் தேசங்களையும் சுற்றிப் பார்த்து, அங்கங்கு உள்ள நிலையையும் கவனித்துணர்ந்தார். ருஷியாவில் உதித்துள்ளதுபோன்ற புதிய நிலை நம் இந்தியாவிலும் உதிக்கவேண்டுமென அவருக்கு ஆவல் மிகுந்தது. இங்கும் ஏழைகள் சுகவாழ்வு வாழவேண்டுமென அவருக்கு ஆனந்தக் கனவு தோன்றியது.

ஜவாஹர் தம் மனைவியாருக்குரிய வைத்தியஞ் செய்து, உலக நிலையையும் ஊன்றியுணர்ந்து, இந்தியாவுக்குத் திரும்பி வந்தார். தமது உலக அறிவைக கட்டுரை மூலம் பத்திரிகைகளில் வெளியிட்டார்; ருஷியாத் தேசத்தின் நவீன நன்னிலையையும் செவ்வனே விளக்கிக் கட்டுரைகள் பல வரைந்தார். இந்திய இளைஞர் உலகம் அக்கட்டுரைகளை விரும்பிப் படித்து இன்பம் அடைந்தது.

ஜவாஹர் ஏகாதிபத்திய எதிர்ப்பு மகாநாட்டுக்குப் போய் வந்ததையும், அங்கே இந்தியாவின் இழிநிலையை அம்பலமாக்கியதையும், ருஷியாவின் நிலையைப் புகழ்ந்து கட்டுரை வரைந்ததையும்கண்ட அதிகார வர்க்கம் அவர்மீது மேலும் வெறுப்புக் கொண்டது; அவரைக் கண்டு மிகுந்த அச்சத்திற்கும் ஆளாகியது.

உள்ளதை உரைத்தால் யாருக்கும் உடம்பு எரியும் அல்லவா? ஆனாலும், அதிகார வர்க்கத்தின் வெறுப்புக் கண்டு ஜவாஹர் சிறிதும் அஞ்சவில்லை. எண்ணத்தில் உள்ளதைக் காலம் இடம் பார்த்து, அஞ்சாது நின்று இனிது ஆற்றவே அவர் முனைந்து நின்றார்.

'அஞ்சாமை அல்லால் துணைவேண்டா; எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின்.'

என்பது திருவாக்கு அல்லவா?

# 14. சுதந்தரப் பொருள்

ஏகாதிபத்திய எதிர்ப்பு மகா நாட்டுக்குச் சென்ற ஜவாஹர், 1927-ஆம் ஆண்டின் இறுதியிலே சென்னைமாநகரிற்கூடிய காங்கிரஸ் மகாசபைக்கு வந்து சேர்ந்தார். ஏகாதிபத்திய எதிர்ப்பு மகா நாட்டில் கலந்துகொண்டதன் பயனாக ஆங்கில ஏகாதிபத்தியத்தை ஒழித்துக் கட்ட வேண்டும் என்று அவருக்கு உறுதி பிறந்தது.

அதற்கு இணங்க, அவர் அம்மகாசபையிலே சுதந்தரக் கொடியை அந்தரம் அளாவ உயர்த்தினர்; 'இந்தியா சுயேச்சை அடையும் வரையில் இங்கிலாந்துடன் ஒத்துழைக்க இயலாது!' என்று சங்கநாதஞ் செய்தார்; 'இங்கிலாந்தின் கூட்டுறவினுல் சுதந்தர அமுதத்தை இந்தியா பருக முடியாது!' என்றும் வீரமுழக்கம் செய்தார்.

சுதந்தரம் என்பது பரிபூரண சுதந்தரமேயாம். தேசப் பாதுகாப்பில் சுதந்தரம்—பொருளாதாரத் துறையில் சுதந்தரம்—அந்நிய நாடுகளோடு தொடர்பு கொள்ளுவதில் சுதந்தரம்—இவ்விதம் எல்லா வகையிலும் சுதந்தரம் வேண்டும். அல்லாவிடில் சுதந்தரம் என்பதும் சுயேச்சை என்பதும் பொருளற்ற பேச்சாம்; வீண் மயக்குமாம் என்பதை அவர் தெளிவுபடுத்தினர்.

காங்கிரஸ் மகாசபை அதனை ஒப்புக்கொண்டது. ஆனாலும், தலைவருள் பலர் அதன் உட்கருத்தையும், அதனை நடைமுறையிற்சாதிக்கும் பெரும் பொறுப்பையும் செவ்வனே உணரவில்லை. அது பற்றி அவர் பெரிதும் வருந்தினர். வாய் வீரத்தில் அவருக்கு நம்பிக்கை இல்லை. தீர்மானமொன்று

செய்யின், அதன்படி நடத்தல் வேண்டும் என்பதே அவரது உறுதியாகும்.

வரும்பொருள் உணர்வதில் ஆங்கிலேயர் மிக வல்லவர். காங்கிரசிலே சுதந்தரத் தீர்மானம் நிறைவேறியது கண்டு, அவர்களுக்குக் கலக்கம் பிறந்தது. சட்டசபைகளிலே சுயராஜ்யக் கட்சியினர் நடத்தி வந்த சொற்போரையும் அவர்களாற் பொறுக்க முடியவில்லை. ஆதலின், இந்தியாவின் அரசியலைத் திருத்தும் நோக்குடன் ஆராய்ச்சி செய்ய ஸைமன் கமிஷன் என்னும் ஆராய்ச்சிக் குழுவை அவர்கள் இங்கனுப்பினார்கள்.

அக்குழுவினது தலைவர் பெயர் ஸைமன் என்பது. அதன் அங்கத்தினர் அனைவரும் ஆங்கிலேயரே. ஆதலின், அக்குழுவினைக் கண்டு இந்தியர் வெறுப்பு மிகுந்தனர்; அது சென்ற இடங்களிலெல்லாம், "வேண்டாத கமிஷன் எதற்கு? ஸைமனே, வந்த வழியே போ!" என்று கூறிக் கறுப்புக் கொடியும் பிடித்தனர். அக்கமிஷனை அனைவரும் அசட்டை செய்ததுடன், அதன் வருகையை எதிர்த்துப் பிரசாரமும் செய்தனர்.

அந்தக் கமிஷன் பஞ்சாபுக்குப் போயிற்று. அதனை வெறுத்து, 'ஊருக்குப் போ!' என்று கூறிய பெருங்கூட்டத்தை லாலா லஜபதிராய் நடத்திச்சென்றார். அப்போது போலீஸார் தடிகொண்டு அவரது மார்பில் அடித்தனர். சில நாளைக்கெல்லாம் அது காரணமாக அவர் மாண்டுபோனார். பின்பு ஒரு மாதத்திற்குள் அக்கமிஷன் கான்பூர் நகருககுப் போயிற்று.

பெருந்தலைவரைப் பலி கொடுத்த துக்கமும், 'வேண்டாத கமிஷன் வருகிறதே!' என்ற துயர

மும் ஏற்பட, இவற்றின் அறிகுறியாகத் துக்க ஊர் வலம் ஒன்றை ஜவாஹர் நடத்திச் சென்றார். அச் சமயம் போலீஸின் தடியடி ஜவாஹரின் பொன் ஞன மேனியை இரு முறை மோதியது. பலர், காய முற்றனர்; சிலர் இரத்தக்காயம் அடைந்தனர்; சிலருக்கு மண்டை உடைந்தது. இவ்வளவையும் பொறுத்து நின்றார் பண்டித ஜவாஹர்.

தடியடித் தர்பார் ஒருபுறமிருக்க, "இந்திய ருள் எத்தனை ஜாதி! எத்தனை வகுப்பு! எத்தனை மதம்! நீங்கள் ஒன்றுபட முடியுமா? முடியுமானல், எல்லாரும் சேர்ந்து உங்களுக்கு உகந்த அரசியல் திட்டமொன்று வகுத்தனுப்புங்கள், பார்க்கலாம்!" என்று ஆங்கில மந்திரிகள் மற்றொரு பக்கம் நையாண்டி செய்தார்கள். அதன்மேல், பண்டித மோதிலாலின் தலைமையில் சர்வ கட்சி மகாநாடு ஒன்று கூடியது.

இந்திய மக்களின் பிரதிநிதிகள் பலரும் அம் மகாநாட்டில் கலந்துகொண்டு, அரசியல் திட்ட மொன்று வகுத்தனர். 'இங்கிலாந்தின் குடை நிழலுக்கு உட்பட்ட சுயராஜ்யமே இலட்சியம்,' என்று அம்மகாநாடு தீர்மானித்தது. அந்த அறிக் கையை ஜவாஹர் சிறிதும் விரும்பவில்லை. 'தேசீ யச் சுய மதிப்புக்கு அது விரோதம்,' என்றார் அவர். ஏகாதிபத்தியத்தை ஒழித்துக் கட்டுவதி லேயே அவரது ஊக்கம் மிகுந்தது.

அவர், 'பரிபூரணச் சுயராஜ்யமே இலட்சியமாக வேண்டும்!' என்று அம்மகாநாட்டிலே அழுத்த மாக வாதித்தார். வாதிக்கையில், கம்பீரமான முகத் தோற்றமும், நெரித்து ஏறிய புருவமும், துடிப்பு மிகுந்த கண்ணேக்கும், உரத்த குரலும் பலரை

யும் வியக்கச் செய்தன. எரிமலை அனல் குழம்பைக் கக்குவது போல, அவரது வாயினின்று உரைகள் எழுந்தன. நெருப்பாறு விரைந்து பாய்வது போல, ஒன்றன்பின் ஒன்ருகச் சொற்கள் புறப்பட்டன.

அது கண்டு பழந்தலைவர்கள் பயந்து போனார்கள்; 'இனி நமது வார்த்தை செல்லாது!' என்று முடிவு கொண்டார்கள்; இளைஞர்களோ, 'வருங்கால இந்தியாவின் தலைவர் கிளம்பிவிட்டார்!' என்று பரபரப்பும் ஆவலும் மிகுந்தனர். 'அரசியலிலே புதிய யுகம் தோன்றப் போகிறது! ஒரு கை பார்ப்போம்!' என்று அதிகார வர்க்கம் பல்லைக் கடித்து நின்றது.

சுபாஷ் சந்திரபோஸ், சென்னை S. சீனிவாச ஐயங்கார், பண்டித ஜவாஹர் ஆகிய மூவரும் தேசத்திலே பரிபூரண சுதந்தர இலட்சியத்தைப் பரப்பப் பெருங் கிளர்ச்சி செய்யலாயினர். தேசமோ, மீண்டும் போர் முரசு கொட்டியாக வேண்டும் என்று கொந்தளிப்புக் கொண்டது. அந்நிலையிலே 1929-ஆம் வருஷ இறுதியிலே இலாகூரிற்கூடிய காங்கிரசுக்கு ஜவாஹரே தலைவரானார்.

'பரிபூரண சுதந்தரம் அடைந்தே தீர வேண்டும்! மறுபடியும் போரைத் துவக்க வேண்டும்!' என்று ஜவாஹர் முழங்கினார். மகாத்துமா காந்தியும், 1929-ஆம் வருஷம், டிசம்பர் மாதம், 31-ஆந் தேதிக்குள் அரசாங்கம் வழிக்கு வரவில்லையானல், போர் முறையை வகுப்பதாக வாக்களித்தார்.

# 15. சேவையின் பரிசு

இலாகூர்க் காங்கிரசு மிகச் சிறந்ததாகும். ஏனெனில், அங்குத்தான் பரிபூரண சுதந்தர இலட்சியம் வானளாவி ஓங்கியது. ஏழாண்டுகளாகப் போரை நிறுத்தியிருந்த காந்தி மகானும், 'மறுபடியும் போர் முரசு கொட்டுவேன்!' என்று சபதங்கொண்டார். ஜவாஹரின் தலைமை கண்டு அவர் திருவாய் மலர்ந்தது ஈதாகும்:

"இதுவரையிற் காங்கிரஸ் தலைமை பூண்டவர்களுள் ஜவாஹரே இளைஞர். (அப்போது அவருக்கு வயது நாற்பதே.) வீரதீரத்திலே அவரை வெல்ல எவராலும் இயலாது! போர் வீரனுக்கு உரிய துணிவும், ராஜதந்திரிக்கு உகந்த மதி நுட்பமும் அவர் ஒருங்கே வாய்ந்தவர்; பளிங்கு போன்ற களங்கமற்ற உண்மையாளர். அத்தகையவரிடம் நாட்டின் தலைமையை ஒப்படைத்தல் நலமேயாகும்!"

அவ்விதம் புகழ் மாலை பெற்ற ஜவாஹர் தலைமை தாங்கிய காங்கிரசின் பெருமையை என்னென்று இயம்புவது! பெருஞ்செல்வராய்ப் பிறந்த ஜவாஹர், பெருவீரராய் மாறினர்; படுகொலை நிகழ்ந்த பஞ்சாபில் பரிபூரண சுதந்தரப்பேரிகை முழக்கினர்; மோதிலாலிடமிருந்து பரம்பரையான செல்வத்தை எய்தியது போலவே காங்கிரஸ் தலைமைப் பொறுப்பையும் எய்தினர்.

இந்தியாவின் பழைய நிலைமை மாறவே, புதிய இந்தியா உருவாகிறது என்பதற்கு அப்பொறுப்பு அடையாளமாயிற்று. பலரும் அதனை எண்ணியெண்ணிப் பூரிப்பு அடைந்தனர். வீர சுதந்தர தேவி, அக்காங்கிரசிலே களிநடம் புரிவதைக்

காட்டுவது போலவே, பெருவனப்பு வாய்ந்த பரிமீதமர்ந்து பெருமிதமாக அவர் பவனி வந்தார்.

அப்போது அவரது முக மண்டலத்திலே எல்லையற்ற சத்தி பொங்கியது. அவரது வீரத்தோற்றமும் தியாக வனப்பும் கண்டாரின் உள்ளங்களைக் கவர்ந்தன. தெருவெங்கும் ஜனக்கூட்டம் பொங்கிப் பெருகவே, தேசிய உற்சாகம் கிழவரையும் பற்றிக்கொண்டது! எங்கும் சுதந்தரநாதம்! எங்கும் சுயேச்சை ஆவேசம்! எல்லாரிடமும் புதிய பரபரப்பு!

'ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்ருேன் எனக்கேட்ட தாய்.'

என்னும் வள்ளுவர் வாக்கினுக்கு இலக்காக ஸ்வரூப ராணி தேவியார் மேடைமீது இருந்து தம் திருக்குமாரரின் சான்ருண்மையும் பெருமைப் பண்பும் பார்த்துப் பூரித்தார். தந்தையாரான மோதிலால் கொண்ட களிப்பும் கூறுந்தரமன்று; புலவர் பெருமான் புகன்ற வண்ணம்,

'தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி யிருப்பச் செயல்.'

என்ற காட்சியைக் கண்கொண்டு பருகிப் பெருமிதம் பெற்ருர்! புதல்வர் ஜவாஹரும் தாய்தந்தையருக்குச் சளைத்தாரில்லை. பிள்ளையென்ருல், எல்லாரும் பிள்ளையாவரா? நமது தேசத்தின் எத்தலைவரின் குமாரரும் ஜவாஹரைப் போலச் சிறப்பெய்தவில்லை. லஜபதி, திலகர், தாஸர் முதலியவர் புத்திரப் பேறு படைத்தும் என்ன பயன்?

'மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி, 'இவன்தந்தை
என்நோற்ருன் கொல்!'எனுஞ் சொல்.'

என்னும் திருக்குறளினுக்கு ஜவாஹர் ஒப்பற்ற உதாரணமானர். ஆசைத் தவக்குமாரரது திருக் கோலங்கண்டு தாய்தந்தையர் கண்ணுடன் கருத்தும் குளிர்ந்து ஆசி மொழிந்தனர். சபையாரும், 'ஜவாஹரின் பெருமையே பெருமை!' என்று பேசி மகிழ்ந்தனர்.

ஜவாஹரின் தலைமைப் பேருரை தேசவிடுதலையை அனைவரது உள்ளத்திலும் ஊற்றெடுக்கச் செய்தது; புதிய இலட்சியத்தின் பெருமையை விண்டுணர்த்தி, வீறுப்பை வளர்த்தது; வாலிபத்தின் உயிர் நாடியுடன் முதிர்ந்த ஞானத்தையும் மக்களுக்குப் புகட்டியது; பழைமையான குலதனத்தைப் பாராட்டினும், புதியன புகுதல் வேண்டுமென்பதை வலியுறுத்திற்று! "ஏழைகளின் நல பலமே நான் கோரும் சுயராஜ்ய சுதந்தரம்," என்றார் அவர்.

இறுதியாக அவர் கூறிய உரைகள் இவை: "சபையோரே, வாலிபரே, தோழர்களே. பரிபூரண சுதந்தரத்தை நீங்கள் அடைய முயலுகையில், உங்களுக்குக் கிடைக்கும் பரிசுகள் எவை? கஷ்ட நஷ்டம்! சிறைவாசம்! அவற்றுடன் மரணமும் ஞாபகம் இருக்கட்டும்! மரணமே வந்து நேர்ந்தாலும், 'தேச விடுதலையிலே சீரிய பணியாற்றினேம்!' என்னும் ஆறுதல் உங்களுக்கு உதிக்கும்!"

அவரது வீரவாசகங் கேட்டு, மகாத்துமா காந்தியும் பிரமித்தார். சுதந்தர தேவியின் சங்கநாதமாகவே அவர் வாய்ச்சொல் துலங்கியது. அடி வயிற்றிலிருந்து பொங்கியெழுந்த உரை அல்லவா அது?

# 16. காந்தியை முந்தல்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்தொன்பதாம் வருஷம், டிசம்பர் மாதம், 31-ஆந் தேதி நள்ளிரவு தீர்ந்தது. அக்கெடுவினுக்குள் அரசாங்கம் பதில் ஒன்றும் தரவில்லை. உடனே மகாத்துமா காந்தி பரிபூரண சுதந்தர வாதியாகிவிட்டார். காங்கிரசும் அவ்வாறே கொடியை உயர்த்தியது.

ஆங்கில ஆட்சி முறையினுல் அன்றளவும் மக்கள் அடைந்துவந்த துன்பங்களையும் தொல்லைகளையும் காந்தி மகான் வகுத்துத் தொகுத்து, அரசப்பிரதிநிதிக்கு இறுதிக் கடிதமொன்று விடுத்தார். அதனையும் அரசாங்கம் மதிக்கவில்லை. 'தவணை தவறிவிட்டது; எச்சரிக்கையும் தீர்ந்துவிட்டது,' என்பதைக் கண்ட காந்தி மகான் போர் முரசு கொட்டிவிட்டார்!

அஹிம்ஸா தர்ம முறையிலேயே 1930-ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம், 6-ஆந் தேதி போர் தொடங்கியது. அப்போர் உப்புச் சண்டை என்னும் வடிவங் கொண்டது. 'அநீதியான உப்புச் சட்டத்தை அனைவரும் மீற வேண்டும்!' என்று அவர் ஆணையிட்டார். கூர்ஜரத்திலே தாண்டி என்னும் கடற்கரை நகரில் உப்பை அள்ள அவர் புறப்பட்டார். அதற்குரிய சத்தியாக்கிரகப் படையும் பயணமாயிற்று.

சபர்மதி முனிவர் தேசீயக் கொடி தாங்கி, முப்பது நாள் வரையிற் கோலூன்றிக் கால்நடையாகப் பிரயாணஞ் செய்தார். 'ஈதென்ன பைத்தியக்காரப் பிரயாணம்!' என்று நம்மவருள்ளும் சிலர் ஏளனஞ் செய்தனர். ஆயினும், 'உலகம் என்றுமே கண்டி

ராத மிகப் பெரிய யுத்தம் இது!' என்பதை மதியூகிகள் உணர்ந்தார்கள்.

மகாத்துமா புறப்பட்டுவிட்டார் என்று கேள்வியுற்றதுதான் தாமதம்; பண்டித ஜவாஹரும் கச்சை கட்டினுர். அவர்தம் வயது முதிர்ந்த தந்தையாரும் ஆயத்தமானுர். இதற்கிடையிலே, தந்தையாரும் குமாரரும் கலந்து பேசி, ஆனந்த பவனம என்னும் அரிய மாளிகையை நாட்டு மக்களின் பொது உடைமை ஆக்கிவிட்டனர். அது முதல் அம்மாளிகையே காங்கிரசு மகாசபையின் படைவீடாய் மாறியது.

ஏப்பிரில் மாகம் 10-ஆந் தேதியன்று அலகபாது நகர வாசிகள் சத்தியாக்கிரகக் கோலம் பூண்டு, ஜவாஹரின் தலைமையில் உப்புக் காய்ச்சினர். காய்ச்சிய உப்பை ஜவாஹர் அந்நகரின் தெருவிலே விற்று வந்தார். அவர்தம் வாழ்க்கைத் துணைவியாரான ஸ்ரீமதி கமலா, அப்போரிலும் துணைவியரானுர். ஜவாஹரின் சோதரியாரான ஸ்ரீமதி கிருஷ்ண குமாரியாரும், 'உடன் பிறப்பு' என்பதை உடனிருந்து அறிவுறுத்தினர்.

தள்ளாத வயதும், நோயுற்ற உடலுங்கொண்ட பண்டித மோதிலால் நேரு பின் வாங்குவாரோ! தாயாரான ஸ்ரீமதி ஸ்வரூப ராணியாரும் தம் திருமகனுரைத் தனியே விட முடியுமோ! சத்தியாக்கிரகச் சேனையில் அவ்விருவரும் முன்னணியிலே நின்றனர். ஏப்பிரில் மாதம் 14-ஆந் தேதி தேசத் தலைவர் ஜவாஹர் கைதியானுர். உப்பைக் காய்ச்சுவதற்கு மூட்டிய தீயிலே விறகை இட்டார் என்று அவர்மீது அதிகாரிகள் குற்றஞ்சுமத்தினுர்கள்.

புன்னகையுடன் பண்டித ஜவாஹர் நீதி மன்றத்திலே தோன்றினுர்; தமக்கென இடப்பட்

டிருந்த ஆசனத்தில் கம்பீரமாக அமர்ந்தார். ஐரோப்பிய நீதிபதி, 'உமது பெயர் என்ன?' என்று ஜவாஹரை வினவினர். அதற்கு, 'என் பெயர் உமக்குத் தெரிந்திருக்குமே! நான் தான் ஜவாஹர்!' என்று முகமலர்ச்சியுடன் நம் தேசத்தலைவர் பதில் தந்தார்; 'மேற்கொண்டு எதற்கும் விடையளிக்க விருப்பமில்லை,' என்றும் கூறினர்.

நீதிபதி என்ன செய்வார்! சட்டப்படி மிக ஆடம்பரமாக விசாரணை நடத்தினர்; முடிவிலே ஆறு மாதம் காவல் தண்டனை என்று தீர்ப்பளித்தார். அது கேட்டதும், 'நல்லது! ஏனைய அரசியல் கைதிகளுக்குக் கிட்டாத வசதி எதுவும் எனக்கு வேண்டா,' என்று ஜவாஹர் மொழிந்தார். சிறை வாகனம் வந்து தயாராகக் காத்து நின்றது! 'புன்முறுவலுடன் போராடுங்கள்! காரியத்தைக் கண்டெடுங்கள்!' என்று ஜனங்களுக்குக் கூறிவிட்டு, வாகனத்தில் அவர் ஏறியமர்ந்தார்.

ஜவாஹர் சிறை சென்ருரென்பதைக் கேட்டதும், நகர மக்கள் திரண்டு சென்று, சிறைக் கூடத்தின் வாயிலை நண்ணினர்கள். அது கண்டு சிறை அதிகாரிகளுக்கு 'யாது விளையுமோ!' என்ற அச்சம் பிறந்துவிட்டது! அச்சமயம் அதிகாரிகளின் வேண்டுகோளுக்கு இணங்கி ஜவாஹர் அச்சிறைக் கூடத்தின் வாயிலருகேயுள்ள சாளரத்தின் வழியே ஜனக்கூட்டத்துக்கு வந்தனமளித்தார்.

"சிறையை நிரப்பிவிடுவோம்! போரை மும்முரமாக நடத்துவோம்!" என்று ஜனங்கள் ஆரவாரஞ் செய்து, அமைதியுடன் வீடு திரும்பினர்கள். சிறை புகுமுன்னம், "நான் உங்களை முந்திவிட்டேன்!" என்று மகாத்மா காந்திக்கு ஜவாஹர்

தந்தியனுப்பியிருந்தார். ஜவாஹருக்குக் கிடைத்த தண்டனையைக் கேள்வியுற்றதும், மகாத்துமா மோதிலாலுக்கு வாழ்த்துச் செய்தியொன்று அனுப்பினர். 'ஜவாஹருக்கு முள்ளாலாகிய மணி முடி கிடைத்திருக்கிறது!' என்பதே அந்தச் செய்தியின் கருத்தாம். 'அவருக்குப் பின் அம்முடியைத் தரிப்பவர் யார்?' என்றும் மகாத்துமா அதில் வினவியிருந்தார்.

தம் திரு மைந்தருக்குத் தேசத் தலைமைப் பொறுப்பை அளித்து, அமர்க்களத்தில் அயலே நின்ற தந்தையாரே அம்முள் முடியைச் சூடிக் கொண்டார். 'தந்தையாருக்கு ஏற்ற மைந்தர்! மைந்தருக்கு ஏற்ற தந்தையார்!' என்று உலகம் பாராட்டியது.

தேசத் தலைவர் சிறை புகுந்த செய்தி தேசமெங்கும் காட்டுத் தீப்போலப் பரந்தது. தேசமெங்கும் சத்தியாக்கிரகப் படைகள் எழுந்து, சுதந்தரப் படுகளத்தே மார் தட்டிக் குதித்தன. 'இளஞ் சிங்கம்—தேசிய சிங்கம்—சிறை புக, நாம் சும்மா இருப்பதோ!' என்று ஊர்பேர் தெரியாத நாட்டுப் புறவீரரும் முன் வந்தனர். மாதர் மணிகளும் மன மகிழ்ச்சியுடன் அணிவகுப்பில் கலந்துகொண்டார்கள்.

## 17. தேசத்தின் கொந்தளிப்பு

நயினி என்னும் நகரின் சிறையிலே ஜவாஹர் தவம் புரிந்தார்; தந்தையார் அனுப்பிய கைராட்டையில் நூலும் நூற்று வந்தார். "ஜவாஹரின் தண்டனை இளைஞரின் உலகினுக்கு ஒரு சோதனை. அவரது கண்ணும் புயமும் போல

இளைஞர் துலங்க வேண்டும்! தேசத்தின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக வேண்டும்!'' என்று மகாத்துமா கூறினார்.

அவ்வளவில் இளைஞர் பலரும் புற்றீசல் போலக் கிளம்பி வந்து, படுகளத்தே பாய்ந்தனர். இயக்கத்தின் வேகத்தைக் கண்டதும், அரசாங்கம் அச்சம் மிகுந்து, பற்பல கொடிய முறைகளைக் கையாண்டது. மே மாதம் மகாத்துமா காந்தியை அதிகாரிகள் சிறை செய்தார்கள். அடுத்த திங்களிலே மோதிலாலையும் அவர்கள் சிறைக்குள் தள்ளினார்கள். அப்போது மோதிலாலுக்கு வயது எழுபது.

தேசத்திலே தலைவர் அனைவரும் அரசின் விருந்தினராய்விட்டனர். 'தலைவர்கள் இல்லையே!' என்று தொண்டரும் பிறரும் நினைக்கவில்லை. சத்தியப்போர் மிக்க மிடுக்குடன் நடந்து வந்தது. அடக்குமுறை என்னும் அம்புகள் புறப்பட்டு அச்சத்தியப் போரைச் சிதைத்துவிடப் பார்த்தன. சத்திய சேனை சிறிதும் தளர்வு காட்டவில்லை. அந்த அதிசயங்கண்டு, அதிகாரிகள் திகைத்துப் போனார்கள்; உலகமும் மூக்கிலே விரல் வைத்து வியந்தது.

இதற்கிடையிலே, ஸர் தேஜ் பகதூர் ஸாப்ரு, திரு. ஜெயகர் ஆகிய இருவரும் அரசாங்கத்துக்கும் காங்கிரசுக்கும் இடையே ஓர் உடன்பாடு உண்டு பண்ண முயன்றனர். இதற்கு அதிகாரிகள் ஆதரவு தந்தார்கள். அவ்விருவரும் எரவாடாச்சிறை சென்று, அங்கிருந்த மகாத்துமா காந்தியைக் கண்டு பேசினர். அவரோ, ஜவாஹருக்கும் மோதிலாலுக்கும் எழுதிக் கேட்டார்.

"யான் போரையே காதலிக்கிறேன். அதுவே வாழ்க்கையில் சுவை அளிக்கிறது. மாத்திரைக் கோலை நீங்கள் எடுத்ததும், பாரத தேசம் புத்துயிர் பெற்றது. பின்னல் நிகழப்போவதை நான் அறியேன்! எங்கள் வாழ்க்கை, வீர வாழ்க்கையாகி விட்டது." என்று போரின் பெருமையைக் குறித்து மகாத்துமாவுக்கு ஜவாஹர் எழுதினர்.

அணில் கொம்பிலும் ஆமை கிணற்றிலுமாக இருந்தால் காரியம் நடவாதென இருவரும் அதிகாரிகளுக்கு உரைத்தனர். அதன்மேல் பண்டித ஜவாஹர், பண்டித மோதிலால் இருவரையும் பிற தலைவர்களையும் எரவாடாச்சிறைக்கு அதிகாரிகள் மாற்றினர்கள். அந்தச் சிறைக்குள்ளே தேசத் தலைவர்களின் மகாநாடு நடைபெற்றது. தலைவர்கள் கூறிய நிபந்தனைகளை அதிகாரிகள் ஒப்ப வில்லை. அதிகாரிகள் கூறியவற்றை நம் தலைவர்களும் ஏற்கவில்லை. அதனல், ராஜிப்பேச்சு முறிந்து போயிற்று.

பிறகு, அரசாங்கத்தின் அடக்குமுறைகள் மிகவும் கடுமையாயின. அவசரச் சட்டங்களும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றின. பதினயிரக் கணக்கில் சத்தியாக்கிரக வீரர் சிறை புகுந்தனர். தடியடி எங்கும் தாண்டவம் ஆடியது. துப்பாக்கிப் பிரயோகமும் நடைபெற்றது. காங்கிரஸ் கமிட்டிகளையெல்லாம் அதிகாரிகள் கலைத்துப் பார்த்தார்கள்.

வரவரச் சத்தியாக்கிரகம் வலுத்ததேயொழியச் சிறிதும் தளர்ந்தபாடில்லை. 'எப்பாடு பட்டேனும் இயக்கத்தை நசுக்கியே தீரவேண்டும்!' என்று ஐரோப்பிய சமூகமும் அரசைத் தூண்டி நின்றது.

தனது உயிர் நாடி போன்ற வர்த்தகம் பாழாகும் போது, அச்சமூகம் வேறென்ன செய்யும்?

அப்போது சிறையிலே நோய் கொண்டுவிட்ட மோதிலாலை அரசாங்கம் விடுவித்தது. தண்டனை நாள் நீங்க, ஜவாஹரும் விடுதலை பெற்று வெளியே வந்தார்; வந்த மறு தினமே அலகபாது நகரிலே ஒரு கூட்டத்தில் உற்சாகமாகப் பேசினர். எட்டாம் நாள் ஒரு கூட்டத்திலிருந்து அவரும், அவர் மனைவியாரும், மகளாரும் திரும்பி வருகையில், மறுபடியும் அவரை அதிகாரிகள் சிறை செய்து இரண்டரை வருஷம் தண்டனை விதித்தார்கள்.

அது அறிந்ததும், தொண்டர் சேனை தினம் தினம் பெருகிப் போர் முனையில் குதித்த வண்ணமாயிருந்தது. ஆயுதம் ஏதும் இல்லாமல், சத்தியாக்கிரகிகள் போர் புரிந்து வரும் செய்தி உலகெங்கும் பரவிற்று. 'கத்தியின்றி இரத்தமின்றி இவ்வாறு யுத்தம் நடத்தல் ஆச்சரியம்! ஆச்சரியம்!' என்று உலகிலே பேசாத நாடு இல்லை.

சுதந்தரப் போரின் எதிரொலி அவ்விதம் நாலு திசையும் சென்று தாக்க, நம்மவருள் சுயநலக்காரரும், அதிகாரதாஸரும், அடிமைப் புத்தியினருமான சிலரோ, நடுக்கமுற்றுக் கிடந்தனர். தம் மானமோ தேசமானமோ பாராத சிலரோ, ஆங்கில மந்திரிகளின் அழைப்புக்கு இணங்கி, இங்கிலாந்து சென்று, வட்டமேஜை மகாநாடு என்பதில் அரசியல் பிச்சைக்குக் கையேந்தி நின்றனர்.

ஜவாஹர் சிறை சென்றதும், ஸ்ரீமதி கமலா தேவியாரும் சிறை புகுந்தார். திருமகளாரின் தீரங் கண்டு, கமலாதேவியாரின் அன்னையாரும் காவல் கூடத்தில் வாசஞ் செய்யலானர். ஜவாஹரின்

சோதரியாரான கிருஷ்ண குமாரியாரும் சிறைக் கோட்டஞ் சேர்ந்தார். அவ்விதம் ஜவாஹரின் குடும்பம் முழுவதும் போரிற்குதித்தமை கண்டு, தேசத்திலே பல பெண்களும் அத்தவச்சாலையை நோக்கினர்கள்.

காங்கிரசுடன் உடன்பாடு கொண்டால் அல்லாமல், தேசத்திலே கொந்தளிப்பு அடங்காது என்பது ஆங்கில முதன்மந்திரியாருக்குப் புத்தியிற்பட்டது. அதனால், காங்கிரஸ் தலைவர்களையெல்லாம் விடுவிக்க வேண்டும் என்று அம்மந்திரியார் தெரிவித்தார். அதற்கிணங்க, அரசப் பிரதிநிதியான லார்டு இர்வின் என்பார், அத்தலைவர்களையெல்லாம் உடனே விடுவித்தார்.

அப்போது வீர ஜவாஹரும் விடுதலை எய்தினர் என்பது சொல்லாமலே அமையும். தலைவர்கள் விடுதலை பெற்ற சின்னளைக்குள் மோதிலால் இம்மண்ணுலக வாழ்வைத் துறந்தார். அத்தறுவாயிலே, "எனக்குப்பின் தேச விடுதலைக்குப் பாடுபட மகாத்துமா காந்தியும் மைந்தன் ஜவாஹரும் இருப்பதால், கவலையின்றிக் கண் மூடுகின்றேன்!" என்று அவர் கூறினர்.

அப்பெரியார் மறைந்ததும், பன்னாள் வரையில் ஆனந்த சுயராஜ்ய பவனத்திலேயே காந்தி மகான் தங்கியிருந்து, நேரு குடும்பத்தாருக்கு ஆறுதல் கூறி வந்தார். மானிட மாணிக்கமான ஜவாஹரின் பக்கமே மானிடக்கோடிகளின் தங்கம் தங்கியிருத்தல் இயற்கைதானே!

சத்தியப்போர் நிற்க வேண்டும் என்பதே ஆங்கில மந்திரிகளின் ஆவலாகும். அதன்படி, லார்டு இர்வின் மகாத்துமாவுடன கலந்து பேசி,

ஒப்பந்தம் ஒன்றைச் செய்துகொண்டார். அது காந்தி - இர்வின் ஒப்பந்தம் எனப்படும். அதன்படி, ஏழை மக்கள் தங்கள் குடும்பத்துக்கு வேண்டிய உப்பைக் காய்ச்சி எடுத்துக்கொள்ள உரிமை பெற்றூர்கள்.

'இதந்தரு மனையின் நீங்கி
இடர்மிகு சிறைப்பட் டாலும்,
பதந்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுத் திழிவுற் ருலும்,
விதந்தரு கோடி இன்னல்
விளைத்தெனை அழிவுற் ருலும்
சுதந்தர தேவி! நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே!'

என்று கவிராஜ சிங்கம் சுப்பிரமணிய பாரதியார் பாடிப்போனதை நம் வீர ஜவாஹரும் ஏனைய காங்கிரஸ் தொண்டரும் நடைமுறையில் காட்டி நின்றனர். அந்த ஒப்பந்தம் காண ஜவாஹருக்குப் பிடிக்கவில்லை. அது பயன் தாராது என்றே அவர் கருதினுர். அவ்வாறே அவரும் சுபாஷ்போஸ், வித்தல்பாய் பட்டேல், சென்னை S. சீனிவாஸ ஐயங்கார் ஆகிய மூவரும் சேர்ந்து, தேசமக்களுக்கு அறிகையொன்று விடுத்தனர்.

## 18. மனத்துறவு

சித்தார்த்தர் என்பார், தம் இளமனையாள், செல்வக் குமரன், சிறந்த மணி முடி இவற்றைத் துறந்து, காவி உடை தரித்துக் கானகம் போனுர். 'உலகினர் உய்ய வகை தேடவேண்டும்!' என்பதே அவரது கருத்தாயிற்று. அவரது துறவுக் கோலத்

தைக் கண்டதும், தாயும் தந்தையும் துறவு பூண்டனர் என்று சரித்திரம் பேசும்.

நவீன சித்தார்த்தரான ஜவாஹர், இளமையிலேயே மனத்துறவு கொண்டார்; ஏகாதிபத்தியத்தைத் தொலைக்கக் கங்கணம் பூண்டார்; கொடிய சிறைக்குள் பன்முறை புகுந்தார். அவ்வரிய புதல்வரது தியாகம் கண்டதும் தாய் தந்தையரும், மனைவியாரும், சோதரியாரும் அவரைப் பின்பற்றிச் சுகவாழ்வை விடுத்தனர்; சுயராஜ்யத் தவச்சாலையும் புக்கனர்.

இந்நிலையில் அக்குடும்பத்தாரின் ஆனந்த பவனம் என்னும் அருமந்த மாளிகை, சுயராஜ்ய பவனம் ஆயினது ஓர் ஆச்சரியமோ! ஆனந்த பவனமாயிருந்த காலையிலே, அரசரும் பிரபுக்களும் அதிகாரிகளும் பிறரும் அங்கே பெருவிருந்துண்டு பெருமிதம் எய்தினர்கள். சுயராஜ்ய பவனம் ஆனவுடனே பாரதமாதாவின் சத்தி பீடமாய் அது மாறிவிட்டது.

காந்தி-இர்வின் ஒப்பந்தம் உண்டான பின்பு, தேசத் தலைவர்களின் கூட்டமும் மந்திராலோசனையும் சுயராஜ்ய பவனத்தில் நடைபெறலாயின. மெய்யின் வடிவமான மகாத்துமாவும் பொய்யின் பகைவரான ஜவாஹரும் அங்கே அடிக்கடி கூடிப்பேசி, நம் தேசத்தின் வருங்கால வாழ்வினுக்கு அடிகோலினர். நேரு குடும்பத்தார் தேசத் தவமணிகள். ஆகவே, அக்குடும்பத்தாரின் மாளிகையும் தேசத்தின் மந்திரி சபை ஆயிற்று.

காந்தி-இர்வின் ஒப்பந்தத்தை வீர ஜவாஹர் முதலில் ஒப்பாமல் மறுத்து நின்றார்; அப்பாலோ, கராச்சிக் காங்கிரசில் அந்த உடன்பாடு ஒப்பம்

பெற்றதும், தமது கருத்தினும் மகாசபையின் கருத்தே சாலச் சிறந்ததெனக் கொண்டார்; "நாம் அனைவரும் காந்திஜியைப் பின் பற்றுவதாக முடிவு செய்துவிட்டோம்; நன்றே நேரினும் தீமையே புகினும், அவரையே பின்பற்றுவோம்," என்று காங்கிரஸ் மேடையினின்று உலகறிய உரைத்தார்.

கராச்சிக் காங்கிரஸ் கூடுமுன்பு வீரமணிகளான பகவத் சிங்கு, ராஜகுரு, சுகதேவ் ஆகிய மூவரையும் அதிகாரிகள் தூக்கில் இட்டுவிட்டார்கள். தேசமே ஒருமுகமாய் எதிர்த்தும், அதனை அதிகாரிகள் பொருட்படுத்தவில்லை. அம்மூவரும் ஹிம்ஸை வாதிகளான வெடிகுண்டு வீரர்கள். ஆனாலும், அம்மணிகளின் நோக்கமோ, தேசபக்தியேயாகும். அம்மூவருள் முதல்வரான பகவத் சிங்கை இளம் பிராயம் முதல் ஜவாஹர் நன்கு அறிவார்.

இருள் நிறைந்த இரவில் ஒளிவிடும் உருவைப் போலப் பகவத் சிங்கின் வீரம் மின்னியதை வீர ஜவாஹர் மனமாரப் பாராட்டினர். ஆயினும், அவ் வீர மணியின் வழி முறையோ காங்கிரசின் வழி முறைக்கு நேர் மாறானதாகும். இதனையும் அவர் சுட்டிக்காட்டி வருந்தினர்; "இக்கால நிலையில் அஹிம்ஸையே சிறந்த சாதனம். அதனைக் கைவிடின், தேசத்திலே குழப்பமும் கலக்கமும் நேரும்," என்றும் வலியுறுத்தினர்.

சுருங்கச் சொன்னல், "பகவத் சிங்கின் வீரம் வேண்டுவதே! ஆனல், ஹிம்ஸை வழி வேண்டா; அஹிம்ஸையே பூண்டுநிற்போம்," என்பது ஜவாஹரின் அறிவுரை என்னலாம். சுயராஜ்யம் எய்துமுன், பகவத் சிங்கைப் போன்ற பல வீரரைப் பறிகொடுத்தாக வேண்டும் என்று கூறுகையில், அவர்

கண்களிலே நீர் ததும்பியது; நாவிலே வார்த்தை குழறியது; நெஞ்சிலே துடிப்பும் தோன்றியது.

பகவத் சிங்கின் கறையற்ற உள்ளத் தெளிவை மகாத்துமா காந்தியும் பண்டித மாளவியாவும் மனங்கசிந்து மொழிந்தது கண்டு, சபையார் இரத்தக் கண்ணீர் வடித்தனர். சுயராஜ்யம் என்பது ஏழை மக்களுக்கு நல்வாழ்வு தேடித் தருவதேயாம் என்று ஜவாஹரும் காந்தியும் கலந்து, சுயராஜ்யத் திட்டம் ஒன்றை வகுத்தும் தொகுத்தும் விளக்கி நிறைவேற்றினர். அத்திட்டத்தை வலியுறுத்தி அலகபாது நகரிலே விளக்கியுரைக்கையில் ஜவாஹர் கூறியது:

“நாலாயிரம் ஐயாயிரம் என்று அதிகாரிகள் சம்பளம் வாங்குவது என்பது இனி மலையேறிவிடும்! மாதம் ஐந்நூறு ரூபாய்க்குமேல் உயர்தர அதிகாரிகள் ஊதியம் பெற மாட்டார்கள். அதிகார வர்க்க ஆட்சிக்குப் பதிலாக மக்களின் பஞ்சாயத்து ஆட்சியே ஏறபடும். காலந்தள்ளுவதற்கு அவசியமான ஊதியம்பெற்று உழைக்கும் அதிகாரிகளே சுயராஜ்யத்தில் சிறப்பெய்துவர். சுயராஜ்யத் திட்டத்தின் சாரம் இதுவேயாம்!”

ஏழை இந்தியாவின் சுயராஜ்யத் திட்டத்தை அவர் விளக்கியுரைத்தது கேட்டு, மாந்தர் அனைவரும் மகிழ்ச்சி எய்தினர். மக்களுக்கு உயிர் நாடி போன்ற பேச்சுரிமை, எழுத்துரிமை, சமய உரிமை முதலியன எல்லாம் அக்காங்கிரசில் உறுதி பெற்றன. ‘நாடு நமது; அதன் நலங்கள் நமக்கே உரியன; அன்னியருக்கு இங்கே மாமன் காணி போன்ற உரிமை இராது; இனி எவர்க்கும் நாம் அடிமைசெய்யோம்!’ என்னும் கொள்கையும் ஓங்கியது.

இவ்வளவுக்கும் ஜவாஹரின் முயற்சியே காரணம் என்று கூற வேண்டும். அது கண்டு இளைஞருலகம் இளைஞர் திலகத்திடம் உவகை பூத்தது; அவரை உச்சிமீது கொண்டும் கொண்டாடியது. அதன்மேல், ஆங்கில மந்திரிகளின் அழைப்பை மதித்து, காங்கிரசின் ஒரே பிரதிநிதியாய்க் காந்தி மகான் இங்கிலாந்து சென்றார். சத்திய யுத்த நிறுத்தத்தினால், தேசத்திலே கொந்தளிப்பும் ஒருவாறு அடங்கியது என்னலாம்.

அதனால், பண்டித ஜவாஹரும் சிறிது ஓய்வு கொண்டார்; அந்த ஓய்வை வீண்போக்காமல் அயலகமான இலங்கையில் கழிக்க எண்ணினார்; மனைவியாரையும் மகளாரையும் தம்முடன் அழைத்துச் சென்றார்.

## 19. இலங்கை விஜயம்

இலங்கை என்பது இந்தியாவை அடுத்துத் தெற்கேயுள்ள ஒரு தீவாகும். இயற்கையழகை அங்கே இனிது கண்டு களிக்கலாம். நம்மவருள் வறியவர் பலர் அங்கே உழைத்துப் பாடு படப் போயுள்ளனர்; வர்த்தகஞ் செய்து காலம் கழிக்கவும் சிலர் சென்றுள்ளனர். தவிர, இந்தியாவை அடுத்த பூமி, இங்கு நடக்கும் போராட்டத்தையும் உணர்தல் வேண்டும். நோய்வாய்ப்பட்டுள்ள இல்லக்கிழத்தியாருக்கும் அத்தீவு வாசம் பயனளிக்கும். ஆதலின், பண்டித ஜவாஹர், 1931-ஆம் ஆண்டு, ஏப்பிரில் மாதம் அங்கே போய்ச் சேர்ந்தார். அவர் போய்ச் சேருமுன்னமே அவர் புகழும் பெயரும் அங்கே பரவியிருந்தன. கொழும்பு நகரில் அவர் தங்கியிருந்த போது, கூட்டம் கூட்டமாக ஜனங்கள்

வந்து, அவரைக் கண்டு, அவரது முகவிலாசம் பார்த்து மகிழ்ந்து திரும்பினார்கள். ஒருவரோ, பரவசம் மிகுந்து நிலமிசை விழுந்து அவரைக் கும்பிட்டார். அது ஜவாஹருக்குப் பிடிக்கவில்லை.

கடவுளை நாம் அனைவரும் கீழே விழுந்து வணங்குகிறோம். ஆனால், கடவுள் உகக்கும் வண்ணம் நடப்பவர் நம்முள் எத்தனை பெயர்? நமது கும்பீட்டைக் கடவுள் அவ்வளவாக விரும்பார்; நமது நேரிய நடைமுறையையே பெரிதும் விரும்புவார். பெரியார்களும் அப்படித்தான். பூமியிற் படிந்து வணங்கியவரை நோக்கி நம் பண்டிதர் புகன்ற பரிவுரை ஈதாகும்:

"மனிதனை மனிதன் வணங்குவது ஏன்? சமதருமக் கொள்கைக்கு அது ஒத்ததன்று. நம்மை நாமே தாழ்வாகக் கருதும் தன்மை நம்மிடம் தடித்துள்ளது. அது பற்றியே நாம் அன்னியருக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றோம். மனித சமூகத்திலே ஏற்றத் தாழ்வு என்பது கூடாது; சமதருமத்தையும் சுதந்தரத்தையும் நிலை நிறுத்தவே நாம் பாடு பட்டு வருகிறோம். எல்லாரும் தலை நிமிர்ந்து நிற்க வேண்டும்! தன்னம்பிக்கையுடன் வாழ்தல் வேண்டும்!"

அப்பேருரை கேட்டதும், விழுந்து வணங்கியவர் மட்டுமேயல்லாமல், அயலேயிருந்த ஏனையரும் நல்லறிவு தலைப்பட்டனர். வந்த விருந்ினரை விழுப்பத்துடன் உபசரிக்க வேண்டும் என்று இலங்கையர் ஆவல் கொண்டனர். ஐரோப்பியரை உள்ளிட்ட பல பெருமக்கள் சேர்ந்து, ஜவாஹருக்குப் பெருவிருந்தளிக்க ஏற்பாடுகள் எல்லாம் செய்தனர். உண்டி வகைகளும் திட்டமாகிவிட்டன.

பின்பு அவரிடம் வந்து, ஒப்பம் வேண்டினர். அவர் 'சரி,' என்ருர்.

உடனே இலங்கையின் வழக்கத்தை அவர்கள் தெரிவித்தார்கள் : 'எந்த விருந்து நடந்தாலும் சரி; முதல் மரியாதை அரசர் பிரானுக்கு ; அடுத்தபடி கவர்னருக்கு ; அப்பால் விருந்தினருக்கு ! இவ்விதம் முறையே மூவருக்கும் மரியாதை செலுத்தி, அதன் அறிகுறியாகப் பானவகைகள் பருகுவது உண்டு,' என்றனர். இதற்கு ஜவாஹர் இணங்கவில்லை. 'அத்தகைய மரியாதை ஏன்? அதற்கு அடையாளமாகப் பானம் பருகுதல் ஏன்? அவ்வழக்கம் வேண்டா,' என்று ஜவாஹர் சொன்னுர். அதன் காரணம் யாது?

பானங்கள் பருகுவது என்பது, மது வகைகளை அருந்துவதாகும். மதுவிலக்கை மேற்கொண்ட காங்கிரஸ் கொள்கைக்கு அது மாறுபட்டதாகும். அன்றியும், பரிபூரண சுதந்தரம் வேண்டும் என்று போராடும் பெருவீரரான பண்டிதர், ஆங்கில அரசர் பிரானுக்கும் அந்த அரசரின் பிரதிநிதியான கவர்னருக்கும் மரியாதை செலுத்துவது, அவர்களின் ஆட்சியை ஒப்புக்கொள்வது போலாகும் ; சமதருமக் கொள்கைக்கும் மாருகும்.

விருந்துக்கு அழைத்தவர்களோ, அவ்வழக்கத்தைக் கைவிட முடியாது என்ருர்கள். 'அப்படியானல், விருந்தே வேண்டா,' என்று அவர் விளம்பிவிட்டார். விருந்து நடக்கவில்லை. கொண்ட கொள்கையில் இம்மியளவும் பிறழ அவர் ஒருப்படுவரோ? பின்பு அவர் கண்டி நகருக்குப் பயணமாஞர். அங்குள்ள நகராண்மைக் கழகம் அவருக்கு அரிய வரவேற்பு அளித்தது. அதற்கு அவர் பதில் தந்ததன் கருத்து இது :

"இந்திய சுதந்தரப்போர் சத்தியத்தை அடிப் படையாகக் கொண்டது; அஹிம்ஸையை ஊன்று கோலாகக் கொண்டு நடப்பது. யார்மீதும் எங்களுக்கு வெறுப்போ, விரோதமோ, இல்லை. மக்களின் நலபலத்தைப் பறிக்கும் ஆட்சி முறையை ஒழிப்பதே எங்கள் நோக்கமாம். உலகெலாம் இன்புற்றிருக்க வேண்டும் என்பதே எங்கள் கோட்பாடு.

"எங்களது சத்தியப் போரின் மூலம் உலகினுக்கும் ஓர் உயரிய வழியைக் காட்டவே விரும்புகிறார் மகாத்துமா காந்தி. தீமை செய்வாருக்கும் நன்மையே புரிந்து மானிடக் கோடிகள் உய்யவேண்டும் என்று அவர் ஆவல் கொண்டுள்ளார். எந்த நாட்டுடனும் நேர்மையான தொடர்பு கொள்ளவே நாங்கள் விரும்புகின்றோம். எல்லா நாடுகளும் இனிய சமுதாய வாழ்க்கை கொள்ளின், உலகிலே சண்டை ஏது? பூசல் ஏது?"

இவ்வாறு அவர் பேசியது கேட்டு இலங்கையர் மனவிரிவும் மகிழ்ச்சியும் ஒருங்கே அடையப் பெற்றனர். ஏறக்குறைய ஒரு மாத காலம் அவர் இலங்கைத் தீவிலே தங்கியிருந்தார்; எங்கும் உள்ளதை உள்ளவாறே எடுத்துரைத்தார்; உள் ஒன்று வைத்துப் புறமொன்று பேசுவது என்பதை அவர் அறியார். அவருடைய வீர உரைகளும் விவேக மொழிகளும் யாவருக்கும் புத்துயிர் ஊட்டின. ஐரோப்பியரும் அகமகிழ்ந்து போற்றினர்.

அங்குள்ள யாழ்ப்பாணத்துத் தமிழர் அவருக்கு வரவேற்புத் தாள் வாசித்தளித்தனர். பனையோலையில் எழுதி, கருங்காலி மரத்தினுற் கவசம் இட்டு, வெள்ளியினல் சித்திரங்கள் அமைத்துச் செய்யப்

பட்ட பேழை காணிக்கையாய் வந்தது. பின்பு அவர் இலங்கையை வாழ்த்திவிட்டுத் திருநெல் வேலிக்கு வந்தார். அங்கும் தமிழர் அரிய வரவேற்பு அளிக்க, அதன் புதுமை கண்டு அவர் வியந்தார்.

பின்னர் அவர் மலையாளம், மைசூர் இவற்றின் வழியே பம்பாய்க்குச் சென்று, காந்தியடிகளைக் கண்டார்; பின்பு தமது அலகபாது நகரம் நண்ணி னர். காந்தி-இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டும், குட்டி அதிகாரிகள் கோலாகலமாகக் கொடுமை வழியி லேயே நடந்து வந்தார்கள். ஜனங்கள் அதனைப் பொறுக்காமல், சட்ட மறுப்புப் போரைத் துவக்க வேண்டும் என்று ஜவாஹரை வற்புறுத்தி வந் தார்கள்.

ஒப்பந்தத்தை மீறி நடக்க ஜவாஹர் ஒப்ப வில்லை. பொறுமையுடன் இருக்கும் வண்ணம் மக் களை அவர் வேண்டிக்கொண்டார். காந்தி மகானும் இலண்டன் மாநகருக்குப் பயணமானர். வெற்றி யுடன் திரும்புமாறு அனைவரும் அவரை வாழ்த்தி வழியனுப்பினர். 'எல்லாம் ஆண்டவன் கையில் உள்ளன!' என்று சொல்லிப் போனர் அம்மகான்.

## 20. சிறைத் தோழர்

இந்தியாவின் அரசியலை வகுக்க, இந்தியாவி லிருந்து பல இயக்கத் தலைவர்களை ஆங்கில மந்திரிசபை அழைத்திருந்தது. ஆனாலும், காங்கி ரசின் பிரதிநிதி இல்லாமல் காரியம் நடவாது என் பது தெரியவந்தது. அதன் பிறகுதான், சிறையில் கிடந்த காங்கிரஸ் தலைவர்களை விடுவித்து, மகாத்து மாவையும் அச்சபையார் அழைத்தனர்.

எல்லாம் வெளி மயக்கு என்பது வீர ஜவாஹருக்கு முன்னதாகவே தெரியும். ஆயினும், அம் மயக்கு அம்பலமாக வேண்டுமே! அதுபற்றி மகாத்துமா போய் வருவதை ஜவாஹர் ஒப்பினர். ஜவாஹரின் வாக்கு வீண் போகவில்லை. மகாத்துமாவை அழைத்தும், அவர் கூறிய வண்ணம் அரசியலை வகுக்க அச்சபையார் மறுத்தனர். ஆதலின், காந்தி மகான் வெறுங்கையுடன் திரும்பி வந்தார்.

இதற்குள்ளாக, இங்குள்ள அதிகாரிகளோ, காந்தி-இர்வின் ஒப்பந்தத்தை மீறிநடந்து ஜவாஹரையும் சிறை செய்துவிட்டார்கள். மகாத்துமா மீண்டும் போர் முரசு கொட்டினர். தேசம வீறிட்டெழுந்து, தியாகத் தீயில் பாய்ந்தது. சுயராஜ்ய பவனத்தை அதிகாரிகள் கைப்பற்றிக்கொண்டார்கள். காங்கிரஸ் காரியாலயங்கள் பலவும் அவர்களின் வசமாயின. தடியடியும் துப்பாக்கிப் பிரயோகமும் எங்கும் தாண்டவம் ஆடின.

சிறையில் கிடக்கும் ஜவாஹரைக்காண ஸ்ரீமதி கமலா தேவியாரும், ஸ்வரூபராணி தேவியாரும் போயினர். அப்போது சிறையதிகாரி அம்மாதர் மணிகளை அவமதிப்பாக நடத்தினர். ஜவாஹருக்கு மனம் பொறுக்கவில்லை. சிறையில் வந்து தம்மைக் காண வேண்டாவென அவர்களுக்கு அவர் அறிவித்துவிட்டார். தனியே இருக்கும் அவருக்கு அருமையான நூல்களே துணையாயின. கலை மகளுடன் அவர் உறவாடி வந்தார்.

உலகப் படத்தை அவர் வைத்துக்கொண்டு, தாம் போய் வந்த தேசங்களையெல்லாம் படத்திலே பார்ப்பார்; ஆங்காங்குப் போய் வந்த நினைவுகளெல்லாம் அவருக்கு உதிக்கும். அவற்றை

எண்ணியெண்ணி அவர் மகிழ்வார். சின்னாள் சென்றதும், இமய மலையின் அடிவாரத்திலுள்ள டேராடூன் சிறைக்கு அவரை மாற்றினர். அச்சமயம் அவர் ஜெர்மன் பாஷை பயின்று வந்தார்.

அதனையறிந்த போலீஸ் அதிகாரி ஒரு கட்டு ஜெர்மன் சஞ்சிகைகளை அவரது வண்டியில் போட்டுக் களித்தான். அவரும் அது கண்டு ஆனந்தம் எய்தினர். டேராடூன் சிறை போய்ச் சேர்ந்ததும், சிறையின் ஜன்னல் வழியே பனிவரையை அவர் நோககுவார்; மேகங்கள் படிந்து தவழ்வதையும் பார்ப்பார்; தாம் முன்பு மலையுச்சிகளில் ஏறிப் போன சந்தர்ப்பங்களையெல்லாம் நினைத்துககொள்வார்.

மேகங்கள் தோன்றி மறைவதையும், குவிந்து மழை பொழிவதையும் அவர் நோக்கி நோக்கி, ‘உலக வாழ்க்கையும் அரசியல் போராட்டமும் இப்படித்தான்!’ என்று கருதிக் களிப்பார். நாட்கள் சில சென்றதும் மழை கொட்டவே, அவரது அறையில் ஈயும் எறும்பும் குளவிகளும் வந்து குவிந்து விட்டன. எறும்புகள் சாரிசாரியாய் அவர் அறையிலே இங்குமங்கும் போகும். ஈக்கள் வந்து அவர் முகத்திலும் உடம்பிலும் மொய்க்கும்.

குளவிகள் மட்டும் ஓரிடத்திலே கூடு கட்டி முதலில சும்மா இருந்தன. அப்பாலோ, ஒரு நாள் குளவி ஒன்று அவரை முகத்திலே கொட்டி விட்டது. வலி தாளாமல் அவர் வருந்தினர். அந்த உயிர்ப் பிராணிகளை வெருட்டி வெருட்டிப் பார்த்தும், அவை போவதாயில்லை. அற்ப உயிர்களாயினும், துணையாய் இருக்கின்றன என்று அவர் எண்ணிச் சிரித்தார். மழைக்கு ஒதுங்கி வாழும் உயிர்களை ஓட்டுவதில்லை என்று அவர் உறுதி கொள்ள நேர்ந்தது.

ஒரு நாள் அதிகாலையிலே அவரது அறைக்கு வெளியில் பிராணிகளின் அழுகுரல் கேட்டது. உடனே கதவைத் திறந்து பார்க்க, அப்போது பிறந்த மூன்று நாய்க்குட்டிகள் குளிரால் வருந்திக் கூவுவதைக் கண்டார். உடனே மூன்றையும் எடுத்து அறைக்குள்ளே கொண்டுபோய் அவற்றிற்குப் பால் ஊட்டினர்; குளிரைப் போக்கத் தமது சால்வையைப் போட்டு மூடினர். பின்பே அவை மூன்றும் கூவுவதை நிறுத்தின.

அவற்றுள் ஒன்று சதா இங்கும் அங்கும் ஓடிக்கொண்டிருககும். ஜவாஹர் 'சஞ்சலன்' என்று அதற்குப் பெயரிட்டார்; மற்றொன்றோ, குறும்பு பண்ணிக்கொண்டேயிருக்கும். 'குறும்பன்' என்று அதனை வழங்கினர்; மூன்றாவது குட்டி எப்போதும் ஆனந்தமாயிருக்கும். அதற்கு 'ஆனந்தன்' என்று நாமம் சூட்டினர். மூன்றும் அறைக்குள்ளேயே வசித்து, அவரது உணவில் பங்கு கொள்ளும்.

இப்படியிருக்கையில், ஒரு நாள் சிறையதிகாரி வந்து,' கைதிகள் நாயை வளர்க்கக்கூடாது,' என்று கூறினன். குட்டிகளை விட்டுப் பிரிய ஜவாஹருக்கு மனமில்லை. சிறையதிகாரி அதை அறிந்து, 'குட்டிகள் இங்கேயே இருககட்டும்,' என்று சொல்லிப் போனன். நடக்கத் தெரிந்தவுடனே சஞ்சலன் வெளியே ஓடி, நெடுநேரம் வரையில் வாராதிருந்தது. அதனைக் காணமையால் ஜவாஹர் இங்குமங்கும் தேடித் திரிந்தார்.

ஒருநாள் ஜவாஹரின் அறையிலே பெரிய கருந்தேள் ஒன்று வந்துவிட்டது. அதனை ஒரு மெல்லிய கயிற்றிலே கட்டி, அவர் தொங்கவிட்டார். அதுவோ ஆடி ஆடி அக்கயிற்றை விட்டுக் கீழே விழுந்து

ஓடிப்போய்விட்டது. அப்பால் அவரது அறையை அது எட்டிப் பார்க்கவேயில்லை.

அப்போது அறைக்கு வெளியே தூரத்தில் உள்ள மரங்களில் பல வர்ணமுள்ள பட்சிகள் வந்து அமரும்; சில, இன்னிசையுடன் பாடும்; சில, உரத்த குரலில் கூவும்; சில, கீச்சுக்கீச்சு என்று கத்தும். அவை தம் இனத்துடன் கூடிக் களிப்பதையும், குஞ்சுகளுக்கு உணவு ஊட்டுவதையும், வானத்திலே ஒய்யாரமாய் எழுந்து பறப்பதையும் பார்த்துப் பார்த்து ஜவாஹரின் மனம் மகிழும். இப்படி ஒன்றரை வருஷம் சிறையிலே கழித்தார் அவர்.

## 21. தேவியாரின் பிரிவு

காவல் கூடத்திலே ஜவாஹர் கிடக்கையில், தாயார் நோய் கொண்டிருப்பதாகத் தகவல் கிட்டியது. உடனே அன்னையாரைப் பார்த்து வருமாறு அவரை அதிகாரிகள் வெளியே விட்டார்கள். ஐந்தரை மாதகாலம் அன்னையாரின் அருகே இருந்து அவர் பணி செய்து வந்தார். அந்தத் தேவியாரின் நோய் குணமாயிற்று. உடனே ஜவாஹரை அரசாங்கம் சிறைசெய்து, கொண்டு போய்விட்டது.

ஸ்ரீமதி கமலா தேவியார் பின்பு உடல் நலிவு கொண்டார்; வரவர அவரது நிலைமை கவலைக்கு இடமாயிற்று. அப்போதும் அவரை அதிகாரிகள் வெளியே அனுப்பினார்கள். மனைவியாரின் அருகே இருந்து அல்லும் பகலும் அவர் ஆறுதல் கூறி வந்தார். நாளடைவில் மனைவியார் குணமும் கொண்டார். கொண்டதும், ஜவாஹரை மீண்டும் சிறைக்

கூடத்துக்கு அதிகாரிகள் கூட்டிக்கொண்டு போய் விட்டார்கள்.

கணவரைப் பிரிந்ததும் கமலா தேவியாரின் நோய் மறுபடியும் தலை காட்டி, நாளுக்கு நாள் முற்றி, அவரைப் பெரிதும் வாட்டியது. அரசியலிற் கலந்துகொள்வதில்லை என்று வாக்களித்தால், ஜவாஹரை விடுவித்துவிடுவதாக அதிகாரிகள் சொன்னார்கள் அதனை அறிந்ததும், 'வேண்டா! வேண்டா!' என்று கணவருக்கு அக்காதலியார் அறிவித்தார். ஆனாலும், அவரது நிலைமையோ, வர வரக் கேவலமாகிவிட்டது.

ஆதலின், தேவியாரை மலைவாசஸ்தலத்துக்கு வைத்தியர் அழைத்துச் சென்றனர். அதற்கு அருகேயுள்ள ஒரு சிறைக்கு ஜவாஹரை மாற்ற அதிகாரிகளுக்கு நல்லெண்ணம் உண்டாயிற்று. வேண்டும்போது மனைவியாரைப் பார்த்துவர வசதி கிட்டியது பற்றி ஜவாஹர் ஆறுதல் அடைந்தார். தேவியாரின் நோயோ, நாளுக்கு நாள் கவலைக்கு இடமாயிற்று. உயிர்த் துணைவியாரின் நிலை கண்டு ஜவாஹரின் உள்ளம் துடித்தது.

ஜெர்மனியில் உள்ள சிகிச்சை ஸ்தலத்துக்கு அவரை அனுப்பியாகவேண்டும் என்று வைத்தியர் முடிவு கட்டினர். அவ்வாறே தம் புதல்வியாரான இந்திராவுடன் ஜெர்மனிக்கு அவ்வம்மையார் பயண மானார். அது கேட்டதும் கவலை மிகுந்தார் ஜவாஹர்.

ஜவாஹர் தங்கியிருந்த அறையின் அருகே ஐந்து சிறிய மைனாக்கள் இருந்தன. அவை நாள் முழுதும் பாடிக்கொண்டேயிருக்கும். தினம் அவற் றினுக்கு ஆகாரம் அளித்து வந்தார் அவர். கமலா

வின் நினைவு தோன்றும்போது, தமது உணவை அவர் மறப்பார்; மைனுக்களுக்கு உண்டி அளிப்பதையும் மறந்துபோவார். அத்தருவாயிலே, அவை ஐந்தும் பறந்து வந்து, இறக்கைகளை அடித்துக் கொண்டு அவரைச் சுற்றிச் சுற்றி வரும். உடனே அவற்றினுக்கு உணவு ஊட்ட அவர் தவறுர்.

ஜெர்மனியிலும் கமலாவின் நோய் குணமாக வில்லை. மரணப் படுக்கையிற்கிடந்தார் அந்த மாதேவியார். அது சமயம் அரசாங்கம் ஜவாஹரை விடுவித்தது. உடனே அவர் ஜெர்மனிக்குப் பறந்து சென்றுர். அவரைக் கண்டதும், தேவியார் முகத்திற்புன்னகை தவழ்ந்தது. 'நோய் தெளிந்து விட்டது!' என்று ஜவாஹர் கருதினுர்; மனைவியார் பிழைத்துவிடுவார் என்றே எண்ணியிருந்தார்.

ஆயினும், என்ன பயன்? விதியோ, வேறு விதமாய் இருந்தது. இந்தியா முழுவதும் கமலாவைப் பற்றிக் கவலை கொள்ளாதார் இல்லை. முடிவில் அத்தேவியார் தேவருலகு சென்றுவிட்டார் என்ற செய்தி எட்டியதுதான் தாமதம்! துயரக் கடலில் மூழ்கித் துடித்தனர் இந்தியர் அனைவரும்! நோயையும் பொருட்படுத்தாமல் சிறையில் புகுந்த தேவியாரின் தீரம், தியாகம் இவற்றை யாவரே மறப்பர்!

1936-ஆம் ஆண்டு ஜவாஹர் தன்னந்தனியராய் இந்தியாவுக்குத் திரும்பினுர். திருக்குமாரியாரான இந்திராவோ, இங்கிலாந்திலேயே தங்கிக் கல்வி கற்றுர். மனைவியாரை இழந்து மனம் உடைந்து போனுலும், தேசத்தின்மீது ஜவாஹருக்கு மேலும் காதல் பெருகியது. தேசப்பணியில் முன்னையினும் மும்முரமாய் அவர் மூழ்கிவிட்டார்.

இதற்கு இடையிலே ஆங்கில மந்திரிகள் தாங்கள் விரும்பிய வண்ணம், இந்தியாவின் அரசியலை வகுத்தார்கள். அதன்படி மாகாணங்களில் ஓரளவு சுய ஆட்சி உண்டு. ஆயினும், அதில் காங்கிரசுக்குச் சிறிதும் விருப்பம் இல்லை. வேண்டாத அரசியலை அவர்கள் நம் தலையில் கட்டிவிட்டார்கள். அதனைத் தகர்த்தெறிய வேண்டும். அதற்கு வகை யாது?

அச்சமயத்தில் ஜவாஹரையே மறுபடியும் காங்கிரசின் தலைமை தாங்கும் வண்ணம் மக்கள் வேண்டிக்கொண்டார்கள். மக்களின் அன்பைக் கண்ட ஜவாஹரும் அதனை ஏற்றுக்கொண்டார். 'ஆங்கிலேயர் வகுத்த அரசியல் ஒன்றுக்கும் உதவாது! அதனைப் புரட்டியெறிதல் வேண்டும்! காங்கிரஸ்காரர் தேர்தலுக்கு நிற்க வேண்டும்,' என்று அவர் கருதினர்.

தேசமும் 'சரி' என்றது. தேசம் முழுவதும் மாகாணச் சட்டசபைகளுக்கு உரிய தேர்தல்கள் நடந்தன. காங்கிரஸ்காரர் எங்கும் போட்டியிட்டனர். அச்சமயத்திலே தேசமெங்கும் ஜவாஹர் சுற்றுப் பிரயாணம் செய்தார்; கட்டை வண்டி முதல் ஆகாய விமானம் வரையில் பற்பல வாகனங்களையும் கையாண்டு, ஒரு லட்சம் மைல் பிரயாணஞ் செய்தார். அவர் போகாத கிராமம் இல்லை என்னலாம்.

பதினெரு மாகாணங்களிலே ஏழு மாகாணங்களில் காங்கிரசுக்கே பெருமித வெற்றி கிட்டியது. இரண்டு மாகாணங்களில் பாதியளவு வெற்றியே கிடைத்தது. காங்கிரஸினிடம் ஜனங்கள் வைத்திருக்கும் பத்தியைக் கண்டு அதிகாரிகள் திடுக்கிட்டார்கள்; 'இனி என்ன நேருமோ!' என்றும் அச்சம் கொண்டார்கள்.

# 22. காங்கிரஸ் ஆட்சி

தேர்தலிலே காங்கிரஸ்காரர் வெற்றி பெற்றதும், மந்திரி சபைகளை அமைக்க வேண்டும் என்று பலரும் விரும்பினர். 'நாம் விரும்பாத அரசியல் அது. அதனைத் தொலைப்பது என்றே சபதம் பேசினோம். மந்திரிகளை மீறி மாகாணக் கவர்னர்கள் காரியம் செய்யக்கூடும். ஆதலின், மந்திரி பதவிகளை நாம் ஏற்க வேண்டா,' என்று ஜவாஹர் சொன்னார்.

காந்தி மகானும், 'அதுவே நலம்,' என்றார். உடனே, தேர்தலில் வெற்றிபெற்ற காங்கிரஸ்காரர் அனைவரையும் ஜவாஹர் கூட்டி வைத்து, தேசத்தினிடமே பத்தி பூணுவதாகச் சபதம் வாங்கினார். ஆங்கில அரசினிடம் தொடர்பு கொள்வதில்லை என்றும் அவர்கள் வாக்குறுதி அளித்தார்கள். இந்நிலையில் அதிகார வர்க்கம் திகைத்துப் போயிற்று! அரசியல் சட்டஞ்செய்தும், அதன்படி காரியம் நடக்க வகையில்லை.

அதுகண்டு, 'மந்திரிகளை மீறி நடவோம்; மாகாணங்களிலே மந்திரி சபைகளை அமையுங்கள்,' என்று அரசாங்கம் வேண்டிக்கொண்டது. எனவே, ஏழு மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபைகள் ஏற்பட்டன. இரண்டு மாகாணங்களிலே காங்கிரஸைச் சார்ந்த மந்திரி சபைகள் தோன்றின. அரசியல் சட்டத்தை மதியாமல், மக்களின் நலத்தையே கருதிக் காங்கிரஸ் மந்திரிகள் ஆட்சி நடத்தி வந்தார்கள். அது கண்ட ஜவாஹருக்கு ஆறுதல் பிறந்தது.

அவ்விதமிருக்கையில், 1938-ஆம் ஆண்டிலே அவர்தம் அன்னையார் கண் மூடினார். 'அன்னை

யாரும் போய்விட்டார்!' என்று அவர் வருந்தினர். ஆனந்த-சுயராஜ்ய பவனத்தின் ஒரு பக்கம் தனி மாளிகையில் ஜவாஹர் வசித்து வந்தார்; தாய் தந்தையர், மனைவியார் ஆகிய மூவரும் மறைந்து விட்டனர். சோதரிகளான விஜயலட்சுமியும் கிருஷ்ண குமாரியும் கடிமணங்கொண்டு, கணவர் வீடு சேர்ந்து விட்டனர். குமாரியாரான இந்திராவோ, இங்கிலாந்திலேயே கல்வி கற்று வந்தார்.

எனவே, அம்மாளிகையில் தன்னந்தனியர் ஆனர் ஜவாஹர். மாளிகை மாளிகையாய் அவருக்குத் தோன்றவில்லை. தனியே இருக்கும் அவருக்கு உற்ற துணையானன் உண்மை ஊழியன் ஹரி என்பான். அவன் நெடுங்காலமாக அக்குடும்பத்தின் பணியாளன். யாருமற்ற ஜவாஹரை அவன் அன்னையினும் ஆதரவுடன் காத்து வந்தான்; நேரங்கழித்து உணவு கொள்ள வந்தால், அவர்மீது அன்பினல் சீறுவான்; 'உடலை வைத்துக்கொண்டல்லவோ ஊருக்கு உழைக்க வேண்டும்?' என்பான்.

ஓய்வு கிடைத்த நேரத்திலே அவனுடன் ஜவாஹர் கனிவுடன் உரையாடுவார். அவனும் கண்ணீர் ததும்பப் பழைய நாட்களை எண்ணி வாடுவான். பணியாளனேயானலும், அவனிடம் கலந்து பேசாமல், நேரு குடும்பத்தார் ஏதுஞ்செய்யார். தனியே இருந்த ஜவாஹரும் அப்படித்தான்.

அவ்விதம் ஜவாஹர் காலங்கடத்தி வருகையில், உலகிலே சர்வாதிகார புருஷர் தோன்றினர். ஜெர்மனியில் ஹிட்லர், இத்தாலியில் முஸோலினி, ஸ்பெயினில் பிராங்கோ ஆகிய இவர்கள் தங்கள் இஷ்டப்படி ஆட்சி நடத்தி வந்தார்கள்; அயலே இருந்த சிறிய நாடுகளை ஒவ்வொன்ருகக் கவர்ந்தும்

வந்தார்கள். அதனால், உலகில் ஜனநாயகம் மறைந்து போம் என்று ஜவாஹர் அஞ்சினார்.

அச்சமயம் அவர் ஐரோப்பாவுக்குச் சென்று, அங்குள்ள நிலைமையை நேரிற்பார்த்தார்; அமெரிக்கா, இங்கிலாந்து நாடுகளுக்கு எச்சரிக்கை செய்தார். அதனை அந்நாடுகள் மதிக்கவில்லை. 'விரைவிலே உலக மகாயுத்தம் மூளும்! ஜாக்கிரதை!' என்றும் அவர் முன்னதாகவே உரைத்தார்; வாடி வதங்கிய ஸ்பெயின் தேசத்துக்கு இங்கிருந்து கப்பல நிரம்ப உணவு அனுப்பி உதவினார்.

பின்பு அவர் பர்மா வழியே சீனாவுக்குச் சென்றார். பல்லாண்டு பல்லாண்டாக இந்தியாவுக்கும் சீனாவுக்கும் கலாசாரத் தொடர்புண்டு. அதன்மீது ஜப்பான் போர் தொடுத்திருப்பதைக்கண்டு ஜவாஹர் துடித்தார். அச்சமயம் ஜவாஹர் சீனாவின் தலைவராயிருந்த சியாங்கே ஷேக்கு என்பவரையும் அவர் மனைவியாரையும் கண்டு, அன்புடன் பாராட்டினார்; இங்கிருந்து வைத்திய உதவியும் அனுப்பி வைத்தார்.

முன்னம் ஸ்ரீமதி கமலாவைப் பார்க்க அவர் ஐரோப்பா சென்ற போது, இத்தாலி வழியாகப் போய் வர நேர்ந்தது. அத்தருவாயில் அவரைக் கண்டு பேச முஸோலினி பேராவல் கொண்டு, ஒரு தூதரை அனுப்பி, விரும்பியழைத்தார். ஜனநாயக எதிரியான முஸோலினியைப் பார்க்க அவர் மனம் கொள்ளவில்லை. இந்தியாவிலே மிகுந்த செல்வாக்குப் படைத்த ஜவாஹரைத் தம் பக்கம் இழுத்துக் கொள்ள வேண்டும் என்பதே முஸோலினியின் ஆசையாம்.

ஜவாஹர் சீனாவைப் பார்த்துவிட்டுத் திரும்பியதும், சீனத் தலைவரான சியாங்கே ஷேக்கும்

அவர் மனைவியாரும் இந்தியாவுக்கு விஜயஞ்செய்தனர். இருவருக்கும் இங்கே பெருமிதமான வரவேற்பு நடந்தது. இரு தேசங்களுக்கும் இடையே உள்ள நட்பும் முற்றியது.

சீனாவிலிருந்து ஜவாஹர் திரும்புமுன்னம், ஐரோப்பாவிலே இரண்டாவது உலக மகா யுத்தம் மூண்டுவிட்டது. ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் இவை ஒரு பக்கம்; இங்கிலாந்து, அமெரிக்கா, பிரான்ஸ் முதலிய தேசங்கள் ஒரு பக்கம்; அதனால், ஐரோப்பா எங்கும் வெட்டுப் பழியும் குத்துப் பழியும் ஏற்பட்டன. 'யுத்தம் மூண்டுவிட்டதே! உலகம் அவதி உறுமே!' என்று ஜவாஹர் மிக்க கவலை கொண்டார். 'யுத்தத்திலே உங்கள் நோக்கம் யாது?' என்று இங்கிலாந்தை அவர் அறை கூவி வினவினார்.

இங்கிலாந்தோ, அதற்கு மறுமொழி கொடாமல், இந்தியாவையும் யுத்தத்தில் இழுத்துவிட்டது. காங்கிரஸ் மந்திரிகளையும் தலைவர்களையும் அது கலந்துகொள்ளவில்லை. இங்கிருந்து ஆளையும் பணத்தையும் ஏராளமாகத் திரட்டிச் செல்லவும் அது முனைந்தது. இங்கே ஜனங்கள் மிகவும் வருந்தினார்கள். இந்நிலையில் காங்கிரஸ் என்ன செய்வது!

## 23. 'வெளியேறு!'

'சர்வாதிகாரப் புருஷரை எதிர்க்கவே யுத்தத்தில் இறங்கியுள்ளோம்,' என்று இங்கிலாந்து பறைசாற்றியது. 'அங்ஙனமாயின், ஆங்கில ஏகாதிபத்தியம் இந்தியாவிலிருந்து ஒழியட்டும்; இந்தியாவுக்குச் சுதந்தரம் வழங்குக. வழங்கின், உங்க

ளுடன் தோளோடு தோள்கலந்து, யுத்தத்தில் பங்கு கொள்வோம்,' என்று ஜவாஹர் கூறினர்.

அதற்கும் இங்கிலாந்து மௌனம் சாதித்தது. அதன்மேல், விதியின்றிக் காங்கிரஸ் மந்திரிகள் ஆட்சியை விடுத்து வெளியே வந்தார்கள்; 'யுத்தத்திற்கு உதவி புரிய வேண்டா,' என்று கூறிச் சிறைக்கும் சென்றார்கள். ஆங்கிலேயருக்கோ, அந்நிலைமை கம்புக்குக் களையெடுத்தது போல ஆயிற்று. இங்கிருந்து பணம், படை, பொருள் எல்லாவற்றையும் அவர்கள் ஏராளமாகத் திரட்டிச் சென்றார்கள்.

மக்களின் மனநிலை கண்டு, 'போராட்டத்துக்கு ஆயத்தமாக வேண்டும்,' என்று ஜவாஹர் கூறி, தேசத்தைத் திரட்டி வந்தார். உடனே அவரை அதிகாரிகள் ஒரு வருஷம் சிறைக்குள் இட்டு வைத்தார்கள். அத்தவணை தீர்ந்து அவர் வெளியே வந்தார். பட்டுப்போகும் நிலையிலுள்ள மரத்தைப் போலத் தேசம் காய்ந்து வறண்டு கிடந்தது. உணவும் உடையுமின்றி எல்லாரும் அழுது நின்றனர்.

மகாத்துமாவும் ஜவாஹரும் கலந்து ஆலோசனை செய்தனர். வெள்ளையரின் ஆட்சி இங்கிருந்து அகன்றால் அல்லாமல், தேசம் வாழ முடியாதென்பது இருவருக்கும் தோன்றியது. அவ்வாறே வெள்ளையர் வெளியேறியாக வேண்டும் என்று மகாத்துமா காந்தி எச்சரிக்கை செய்தார்; மக்களை நோக்கி, 'ஒன்று, செயலாற்றுங்கள்! இன்றேல், செத்து மடியுங்கள்!' என்று கூறினர்.

அவ்விதம் பம்பாயிலே 1942-ஆம் வருஷம், ஆகஸ்டு மாதம், 8-ஆந் தேதி தலைவர்கள் கூடித் தீர்மானித்தார்கள். அரசாங்கம் அதனையறிந்து

அன்றிரவின் கடையாமத்தில் தலைவர்களை எல்லாம் கைது செய்து, எங்கேயோ கொண்டு போய் விட்டது. தேசத்திலிருந்த மற்றத் தலைவர்களும் அவ்வாறே சிறை செய்யப்பட்டார்கள்.

வாழ்வில்லாச் சங்கடத்தில் தத்தளித்துக் கொண்டிருந்த ஜனங்கள், மனம்குழம்பி, வெகுண்டெழுந்து ஆங்காங்கே அரசாங்கத்தைத் தாக்கத் தொடங்கினார்கள். சில இடங்களிலே போட்டி அரசாங்கத்தையும் ஏற்படுத்தினார்கள். ஒரு வார காலம் தேசமெங்கும் ஒரே அமளி குமளியாய்க் கிடந்தது.

அதிகாரிகளும் கண் மூடித்தனமாக விமானங்களிலிருந்து குண்டு போட்டும், துப்பாக்கி கொண்டு சுட்டும், ஜனங்களைச் சித்திரவதை செய்தார்கள். அப்போது ஜவாஹரோ, ஆமது நகரின் கோட்டையிலே காவலுள் கிடந்தார்; மகாத்துமாவும் பூனா நகரிலே சிறைக்குள் இருந்தார். ஆளில்லாக் கொல்லையில் மாடு மேய்ந்தது போல அக்கிரமங்கள் நடந்து வந்தன.

மகாத்துமாகாந்தி அது கேட்டு, இருபத்தொரு நாள் உண்ணா நோன்பு கொண்டார்; நாளுக்கு நாள் அவர் நிலைமை கவலைக்கு இடமாயிற்று. நல்ல காலம்! அவர் அந்நோன்பில் உயிரிழவாமல் தப்பினார்! காரியக்கமிட்டி அங்கத்தினர் அனைவரும் ஆமது நகர்க் கோட்டைக்குள் ஒருவாறு காலம் கழித்து வந்தனர்.

சமையலுக்கு ஒருவரும் இல்லை. உணவோ, மிகவும் மோசம்! அதனால், ஜவாஹரின் உடம்பு இளைத்தது. ஆனால், உள்ளம் சளைக்கவில்லை. வெளியே என்ன நடக்கிறது என்பது அவர்களுக்குத் தெரியாது. தோழர்களுடன் பேசியிருந்த

நேரம்போக மற்ற வேளைகளில் ஜவாஹர் படித்துக் கொண்டிருப்பார்; அல்லது எழுதிக்கொண்டிருப் பார்; தோழர்களுடன் பேசுங்காலையில், இந்தியா வின் பண்டைய நிலையை நன்கு கேட்டறிந்தார்; நூல்களிலும் வாசித்துணர்ந்தார்.

அந்நாளிலேதான், ஜவாஹர் 'இந்தியாவைக் கண்டுணர்தல்'[1] என்னும் அரிய நூலை இயற்றினர். அக்கோட்டைக்குள்ளே பூச்செடிகளையும் வைத்து வளர்த்தார். அப்போது அவரே நிலத்தைக்கொத் திப் பாத்தி கட்டித் தண்ணீர் பாய்ச்சி வந்தார் என்பதைக் குறிப்பிட வேண்டும்.

1945-ஆம் ஆண்டிலே அவரையும் வேறு சில ரையும் இமயமலையின் அடிவாரத்திலுள்ள அல்மோ ராச் சிறைக்கு மாற்றினர். ஜவாஹர் அங்குள்ள பறவையினங்கள், மலர் வகைகள், மரஞ்செடிகள் முதலியவற்றை மீண்டும் கண்டு களிக்கச் சமயம் வாய்த்தது. அங்கே இரண்டு குரங்குகள் எப்போ தும் சத்தமிட்டுக்கொண்டேயிருக்கும்; அல்லது இரண்டுஞ் சேர்ந்து விளையாடும்.

அவைகளுடன் சேர்ந்து விளையாடி மரத்துக்கு மரம் தாவிக்குதிக்க ஜவாஹருக்கு ஆசை மிகுந் தது. ஒரு நாள் தமது அறைக்குள்ளே அவர் படித் துக்கொண்டிருக்கையில், வெளியே மிக்க சந்தடி உண்டாயிற்று. குரங்குக்குட்டியொன்று கீழே விழுந்துவிட்டதைக் கண்டு சிறையாளர் கம்பும் கையுமாய் வந்து அதனைச் சூழ்ந்துகொண்டனர்.

தாய்க்குரங்கோ, தன் குட்டிக்காகத் தவித் தது. ஆண் குரங்கு அதனையறிந்து, உடனே உறு மிக்கொண்டு, சிறைச் சுவருக்கு வந்தது. அதன்

1. The Discovery of India

தோற்றத்தைக் கண்டதும், கம்பைக் கீழே போட்டு விட்டு எல்லாரும் ஓட்டம் எடுத்தனர். உடனே ஆண் குரங்கு பாய்ந்துவந்து, குட்டியைத் தூக்கிக் கொண்டு போயிற்று. அது கண்டு அவர் நிம்மதி கொண்டார்.

ஐரோப்பாவிலே 1945-ஆம் ஆண்டில் யுத்தம் நின்றது. ஆனால், ஆசியாவில் நிற்கவில்லை. ஜப்பான் தேசம் சிங்கப்பூரை வசஞ்செய்துகொண்டு மலேயாத் தீவுகளையும் கைப்பற்றி, பர்மாவுக்குள் புகலாயிற்று. அதனால், இந்தியாவுக்கு ஆபத்து நேருமென்பதை ஆங்கில மந்திரிகள் உணர்ந்துகொண்டார்கள்; இந்தியாவை ஒருவாறு சாந்தி செய்யவும் நினைத்தார்கள்.

## 24. ஆங்கிலேயரின் மழுப்பல்

இங்கிலாந்தின் மந்திரிகளுள் ஒருவர் ஸர் ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் என்பவர். ருஷியாவுக்கு அவர் தூது சென்று, ருஷியாவைச் சரிப்படுத்தித் திரும்பினார். பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கும் அவருக்கும் முன்னதாகவே நேசம் உண்டு. ஆதலின், ஆங்கில மந்திரிகள் உடன்பாடு தேட அவரை இந்தியாவுக்கு அனுப்பினார்கள்.

கிரிப்ஸ் என்பார் வந்து, இங்குள்ள தலைவர்களையும் குறிப்பாக ஜவாஹரையும் கண்டு பேசினார். அரசியல் விஷயமாக அவர் சொல்லிய யோசனைகளோ, தலைவர்களுக்குப் பிடித்தமாயில்லை; உண்மையில் சுதந்தரம் அளிப்பனவாகவும் இல்லை. பெட்டியின் சாவியை அளியாமல் பெட்டியை மட்டும் அளித்து என்ன பயன்?

ஜவாஹரும் பிறரும் அவரை மடக்கிக் கேட்ட வுடனே, பதிலுரைக்க வகையின்றி வந்த வழியே போக நேர்ந்தது. இதற்குள் ஜப்பான் தேசம் பர்மாவையும் தாண்டி, இந்தியாவின் எல்லையை எட்டிப் பார்த்தது. ஜப்பானிய விமானங்களும் இந் திய நகரங்களின்மீது தோன்றி, அனைவருக்கும் பரபரப்பை விளைத்தன.

இந்திய மக்களின் பக்க பலம் இல்லாதிருக்கை யில், ஜப்பானை எதிர்கக முடியாதென்பதை அப் போது ராஜப்பிரதிநிதியாயிருந்த லார்ட் வேவல் என்பார் கண்டுகொண்டார். அவர் இங்கிலாந் துக்குப் பறந்து சென்று, ஆங்கில மந்திரிகளுடன் பேசித் திரும்பி, இங்குள்ள எல்லாக் கட்சித் தலை வர்களையும் கூட்டிப் பேசினார்.

'சுதந்தரப் போரிற் பங்கு கொள்ளாத பலரை யும் அழைத்துப் பேசுவதில் என்ன பயன்? மக்க ளின் ஒத்துழைப்பு வேண்டுமானால், காங்கிரஸ் தலை வர்களை மட்டும் கூப்பிட்டுப் பேசவேண்டும்,' என்று ஜவாஹரும் பிறரும் சொல்லினர். 'முஸ்லிம் லீக் ஒத்து வரவில்லையே!' என்றார் வேவல்.

'நெருக்கடியான சமயத்தில் தேசத்தை மறந்த அந்த லீகை இப்போது முக்கியமாக நினைப்பது எப்படி?' என்று ஜவாஹர் வினவினார். ஆயினும், லீகுடன் ஓர் உடன்பாடு கொள்ள அவர் முயன் றார். லீகோ, 'தேசத்தைத் துண்டாக்கி, ஒரு பாகத்தை என்னிடம் கொடுத்துவிடு,' என்று கேட்டது; முட்டுக்கட்டையும் போட்டது.

இந்தியா முழுவதும் ஒன்றாக இருந்தே உயரிய சுதந்தர வாழ்வு எய்த வேண்டும் என்பது ஜவாஹ ரின் கருத்து; காங்கிரஸின் கோட்பாடும் அதுவே

யாகும். இதற்கு விரோதமாக எவ்விதம் நடக்க முடியும்? ஆதலின், வேவலின் முற்சியும் தோல்வி உற்றது. இதற்கிடையிலே சுபாஷ் சந்திர போஸ் ஒரு படையுடன் இந்தியாவின் வடகிழக்கெல்லையில் புகுந்து சில நகரங்களையும் பிடித்துக்கொண்டார்.

இஃது இப்படியிருக்க, மலேயாத் தீவுகளிலே சிங்கப்பூரைக் கைவிட்டு ஆங்கிலேயர் ஓடி வருகையில், அங்கிருந்த இந்தியத் துருப்புகளைக் கைவிட்டு ஓடி வந்துவிட்டனர். அத்துருப்புகளில் அனைவரும் ஜப்பானியரிடம் சிறைப்பட்டுத் தவித்தனர். அவர்களில் பலரையும் திரட்டி, அத்துடன் ஆங்குள்ள இந்தியரின் துணையுங் கொண்டே, இந்தியாவுக்குள் சுபாஷ் போஸ் புகுந்தார்.

அத்துருப்புகளில் சிலர் ஆங்கிலேயரிடம் பிடிபட்டனர். அவர்களுள் தளகர்த்தரான மூவரின் மீது இராணுவ விசாரணை நடத்தித் தண்டிக்க இங்கே ஏற்பாடுகள் நடந்தன. இதனை அறிந்த ஜவாஹர் அம்மூவரையும் காக்க உறுதி பூண்டு, எதிர் வாதமாட வழி செய்தார். அப்போது இந்திய இராணுவத்தார் அந்த எதிர் வாதத்துக்குப் பணவுதவி புரிந்தனர்.

சேனையை நம்பித்தான் நெடுநாளாக ஆங்கிலேயர் நம்மை ஆண்டு வந்தனர். அச்சேனை கலகலத்துப் போனவுடனே அவர்களுக்கு உதைப்பு எடுத்தது. ஆதலின், இந்தியாவுடன் எவ்விதமேனும் உடன்பாடு கொள்ளவேண்டுமென்பதை ஆங்கில மதியூகிகள் உணர்ந்துகொண்டார்கள்.

அச்சமயம் இங்கிலாந்திலே அரசு கொண்ட தொழிற்கட்சியார் நெடுநாளாக இந்தியாவிடம் நல்லெண்ணம் கொண்டவர்கள். ஆதலால், காங்கிரஸ்

தலைவர்களுடன் ஒப்பந்தம் கொள்ள அவர்களுக்கு ஆவல் மிகுந்தது. அக்கட்சியைச் சேர்ந்த சிலர் இந்தியாவுக்கு வந்து, உள்ள நிலையை அறிந்து போயினர்.

பின்பு தொழிற்கட்சி மந்திரிகள் இங்கு வந்து, காங்கிரசுக்கும் முஸ்லீம் லீகுக்கும் இடையே ஒப் பந்தம் செய்ய முயன்றனர். லீகின் தலைவரான ஜனுப் ஜின்ன ஒத்து வரவில்லை. ஆதலின், பெயரள வில் ராஜப்பிரதிநிதி என்று ஒருவரை இருத்தி, அரசியல் அதிகாரம் அனைத்தையும் காங்கிரஸிடமே அம்மந்திரிகள் ஒப்படைத்தார்கள்.

டில்லியிலே காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட் டது. பிரதம மந்திரியாராகவும், அச்சபையின் உப தலைவராகவும் ஜவாஹர் அமர்ந்தார். காங்கிரஸ் காரரே தேச நிருவாகத்தை நடத்தி வந்தனர். இது கண்டு ஜனுப் ஜின்ன அச்சங்கொண்டு, தம் கூட் டத்தாரை அம்மந்திரி சபையில் சேரச் சொன்னர்.

உடனிருந்து அரசியலை நடத்துவதாக முஸ்லீம் லீகு அங்கத்தினர்கள் சொல்லவே, அவர்களை ஜவா ஹர் சேர்த்துக்கொண்டார். அரசியலை நடத்த வந்த லீகு அங்கத்தினர்களோ, அம்மந்திரி சபைக் குள் இருந்த வண்ணம், தேசத்திலே வகுப்புக் கல வரத்தை மூட்டி வந்தார்கள். இதற்கு ஆங்கில அதிகாரிகளுட்சிலரும் உடந்தையாய் இருந்தனர்.

எனவே, ஆங்கிலேயர் என்பார் அதிகார மனைத்தையும் துறந்து இந்தியாவை விட்டு வெளி யேறவேண்டுமென்று மகாத்துமா காந்தியும் ஜவா ஹரும் அழுத்தமாக உரைத்து வந்தனர். அதற் கிணங்க 1947-ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம், 15-ஆந்

தேதி வெளியேறிவிட அவர்கள் ஒப்புக்கொண் டார்கள்.

இதனை அறிந்ததும், லீகரின் தூண்டுதலால் வடவிந்தியாவிலே பல நகரங்களில் வகுப்புக் கல வரங்கள் மிக்ககொடுமையுடன் கொக்கரித்துக் கிளம் பின. "தேசம் முழுவதும் வகுப்புக் கலவரம் பரவி விடும்! அதனல், தேசம் நாசமுறும்! இத்தனை காலம்செய்த காங்கிரஸின் தியாகமெல்லாம் வீணுகி விடும்," என்பதை ஜவாஹர் யூகித்தறிந்தார்.

தேசத்தை இரு துண்டாக்கி, முகம்மதியரே அதிகமான பாகத்தை முஸ்லீம்களிடம் கொடுத்து விடுவதே மேலாகுமென ஜவாஹர் நினைத்தார்; தம் துணைவராக மந்திரி சபையிலிருந்த சர்தார் பட்டேலுடன் கலந்து பேசினர். பூனையை மடியிற் கட்டிககொண்டே சகுனம் பார்ப்பது சரியன்று என்று ஸர்தாரும் ஒப்பினர்.

## 25. தேசம் துண்டாதல்

பாரதபூமி ஒன்ருகவே இருந்து உலகிலே உயர வேண்டுமென்று அது வரையில் வாதாடி வந்த ஜவாஹர், தேசத்தைத் துண்டு செய்ய ஒப்பு வது எங்ஙனம்? 'ஒரு குடும்பத்தைக் காக்க ஒருவனை இழந்துவிடலாம்; ஓர் ஊரை நிலைக்க வைக்க, ஒரு வீட்டை இழந்துவிடலாம்; ஒரு தேசத்தை உரு வாக்க ஒரு சிறு பாகத்தைக் கைவிடலாம்,' என்று தருமநூல்கள் நுவலும்.

இவற்றையெல்லாம் ஜவாஹர் எண்ணிப் பார்த்தார்; தேசத்தின் பெரும்பாகத்தையேனும் காக்கவேண்டும் என்று முடிவு கொண்டார்; கடைசி

யிலே தமது உடம்பிலே ஓர் அவயவத்தை நறுக்கிக் கொடுப்பதே போல, முஸ்லீம்கள் மிகுதியாக வசிக்கும் பாகத்தை லீகரிடம் பிரித்துக் கொடுக்க ஒப்பினர்.

அதன் பின்பே பட்டேலும் பண்டிதரும் மகாத்துமாவை அடைந்து, அவரிடம் அதனை உரைத்தனர். அவரும், "நீவிர் இருவிரும் ஒப்பிய பின் நான் சொல்லக்கிடப்பது யாது? உங்களது மனம் போல நடக்கட்டும்," என்ருர்; அவ்விருவரையும் தேசம் ஆதரிக்க வேண்டும் என்றும் மக்களுக்கு அறிக்கை விட்டார்.

1947-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் இந்தியா தேசம் இரு துண்டாயிற்று. வடமேற்கெல்லை மாகாணம், பஞ்சாபு மாகாணத்தின் மேற்குப்பாகம், சிந்து மாகாணம், வங்காள மாகாணத்தின் கீழ்ப்பாகம் இவை பாகிஸ்தான் என்று பெயர் கொண்டு முஸ்லீம் லீகரின் ஆட்சிக்கு உட்பட்டன.

இந்தியாவின் ஏனைய பாகங்கள், 'பாரத்' என்ற பெயருடன் ஒரு தனித் தேசம் ஆயிற்று. இதற்கு அன்று முதல் முதன்மந்திரியாராய் இருப்பவர் பண்டித ஜவாஹரே.

மேற்குப் பாகிஸ்தானிலுள்ள ஹிந்துக்களுள் பலரையும் லீகர்கள் விரட்டிவிடத்தொடங்கினர்கள். அப்போது அங்கெல்லாம் பிணமலைகள் குவிந்து, இரத்த ஆறுகள் ஓடின.

அவற்றையெல்லாம் ஒருவாறு சமாளித்துப் பொறுமையும் புத்தி நுட்பமுங்கொண்டு பண்டிதர் ஆட்சி நடத்தி வருகிருர். பாகிஸ்தானுடன் சண்டைக்குப் போய், அதனை அழித்துவிட வேண்டும்

என்று பலர் பொங்கியெழுந்தும், பழிக்குப் பழி வாங்க வேண்டும் என்று சிலர் சீறிக் கிளம்பியும், 'பொறுமையே பலனளிக்கும்,' என்று ஜவாஹர் போதம் புகட்டி வருகிறார்.

வம்புச் சண்டைக்கு இழுப்பதுபோல, பாகிஸ்தான் பற்பல தீவினைகள் செய்துமென்ன? பஞ்ச பாண்டவருள் தருமபுத்திரனைப்போல ஜவாஹர் விளங்கிவருவதை யாரும் மறக்கமுடியாது. பண்டிதரின் நேர்மையும் நெறியுங்கண்டு உலகம் அவரைப் பாராட்டுகின்றது!

பாகிஸ்தான் காஷ்மீர் சம்ஸ்தானத்தின்மீது படையெடுத்து, அதனை விழுங்கிவிட முயன்றபோது, அச்சம்ஸ்தானத்திற்கு இந்தியத்துருப்புகளை அனுப்பிய பெருமை ஜவாஹரைச்சாரும். 'இறுதிவரையில் பொறுமையே பூண்டு நிற்போம!' என்றிருக்கிறார் ஜவாஹர்.

அவரது முயற்சியினால் நமது நாட்டின் அரசியல் 'குடியரசு' என்று அமைந்துளது. இதில் வசிக்கும் எவ்வகுப்பினருக்கும் சரி சமமான உரிமை, சலுகை, நலபலம் எல்லாம் உண்டு; வகுப்பு, வர்ணம், மதம் இவை காரணமாக ஏற்றத்தாழ்வு என்பது இல்லை.

உள்ளநாள் உள்ளமட்டும் உழைக்க வேண்டும் என்பதே ஜவாஹரின் ஆசை. தம்மை அவர் இந்தியாவின் முதற்சேவகன் என்றே சொல்லிக்கொள்கிறார். பதவியையோ அதிகாரத்தையோ நாடி முதன்மந்திரியாராய் அவர் இருக்கவில்லை; தேடி அடைந்த சுதந்தரத்தை நிலைக்க வைக்கவே பாடு பட்டு வருகிறார்.

தேசத்தின் பண்டைய பண்பையும், இக்கால உலகப்போக்கையும், மக்களின் நலத்தையும் தழுவி உலகிலே ஒப்பரிய நாடாகத் துலங்கவே அவர் வகை துறை தேடி வருகிறார்; நாள்தோறும் பதினெட்டு மணிநேரம் தேசவேலையில் மூழ்ந்திருக்கிறார். ஊணையும் உறக்கத்தையும் அவர் அவ்வளவாகக் கருதுவதில்லை.

தம் தந்தையார் போன்றிருந்த மகாத்துமாவையும், வலக்கை போன்ற சர்தார் பட்டேலையும் நமனுக்குப் பறிகொடுத்துத் தன்னந்தனியராய் நம் தேச பாரத்தை அவர் தாங்கி நின்றாலும், 'இதனைச் செவ்வனே ஆற்றி முடிக்க வேண்டும்; எல்லாரும் இன்புற்றிருக்கப் பார்க்க வேண்டும்,' என்பதே அவரது ஆவலாம்.

பாரத பூமிக்காகவே பிறந்து, அதன் நலத்துக்கே தமக்குரிய அனைத்தையும் தியாகம் செய்து, அல்லும் பகலும் தேசநலத்தையே சிந்தையிலும் செயலிலும் கொண்டுள்ள பண்டித ஜவாஹருக்கு நம்மால் என்ன கைம்மாறு செய்ய முடியும்? கைம்மாறு கருதாமல் மழையைப் பெய்விக்கும் மேகம் போன்றவர் அவர். வேறு நாம் என்ன சொல்ல முடியும்?

> 'அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
> குன்றுவ செய்தல் இலர்.'

என்னும் திருவாக்கினுக்கு அவரே உதாரண புருஷர். அவர் பெருக்கமெல்லாம் நிறைந்து நின்றாலும், அடக்கத்துடன் விளங்குகிறார்; ஒழுக்கத்திலும் வாய்மையிலும் குன்றாது துலங்குகிறார்; பெருமையுடைய செயல்களை செய்து சிறக்கிறார்; இன்னா செய்தார்க்கும் இனியவே செய்து வருகிறார்.

பதவி என்பது எவரையும் தலை திரியச் செய்யும். ஆனால், ஜவாஹரிடம் அப்பதவி என்பது குற்றேவல் செய்து கிடக்கிறது! குவலயமெல்லாம் மெச்சும் வண்ணம் செயலாற்றவே அவர் முனைந்து நிற்கிறார்.

'தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.'

என்பதே அவரது கோட்பாடாய் இருக்கிறது.

## 26. சிறப்பியல்பு

ஜவாஹருக்கு வயது பத்து இருக்கும். தாயார் கரு உயிர்க்கும் சமயம். அறைக்கு வெளியே அவர் வீற்றிருந்தார். உள்ளே இருந்த டாக்டர் வெளியே வந்து, "குழந்தாய், உனக்குச் சோதரி பிறந்திருக்கின்றாள்! சோதரனையின், சொத்திலே பங்குக்கு வருவான்! அந்தக் கவலை வேண்டா உனக்கு!" என்று விளையாட்டாகச் சொன்னார்.

அது கேட்டதும், ஜவாஹரின் முகம் சுருங்கியது; மனம் வாடியது; "சோதரனையின் சொத்திலே பங்குக்கு வருவான் என்கிறீரே! சொத்திலே பங்கு தர நான் தயங்குவேனே? வயது சென்றவர்களுக்கு ஏன் இந்தப் புத்தி!" என்று வெதும்பினார். பத்தாவது வயதிலேயே இருந்த பான்மை அது!

கானகத்திற்புகுந்து வேட்டையாடுவதில் அவருக்கு விருப்பம் அதிகம். இருபதாவது வயதிலே இமயமலையின் அடிவாரத்திற்புகுந்து வேட்டையாடினார். விலங்குகளை வதைத்தல் அவரது விருப்பம்

அன்று. துப்பாக்கி தாங்கி அடர்ந்த வனத்தூடே விளையாடுவததான் அவரது ஆவல்.

துப்பாக்கி ரவை பட்டு மானென்று அவர் காலடியில் வீழ்ந்தது. வலி தாங்க முடியவில்லை! 'நம்மைச் சுட்டவன் இவன்தானே!' என்று அவரை அது வருந்தி நோக்கியது. அந்நோக்கைக் கண்டதும் அவர் கண்களில் நீர்த்துளிகள் ததும்பின. 'இனிமேல் துப்பாக்கிகொண்டு சுடுவதில்லை!' என அவர் உடனே விரதம் பூண்டார்.

இந்தியா கவர்ன்மெண்டின் மந்திரிகளுள் ஒருவர் ஸ்ரீபிரகாசா என்பவர். அவரும் ஜவாஹரும் இளமை முதல் நேசர்கள். நைனி என்பது வடவிந்தியாவிலே ஒரு சுகவாச மலை நகரம். ஸ்ரீபிரகாசா அந்நகருக்குப் போயிருந்தார். ஏற்கெனவே அங்கிருந்த ஜவாஹர், அவரைக் காணச்சென்றார். அப்போது இரவு மணி பத்துக்கு மேலிருக்கும்.

தலை வலி தாங்காமல் பிரகாசா துடித்துக் கொண்டிருக்கிறார். பண்டிதர் அது பார்த்ததும், வெளியே வந்து நோக்க வாகனம் எதுவும் கிடைக்கவில்லை. உடனே மூன்று மைல் தூரம் நடந்து சென்று, கடை வீதியைக் குறுகி, ஒரமன் என்னும் ஜெர்மன் மாத்திரையை வாங்கி வந்தார். மாத்திரையொன்று உட்கொண்டதும், பிரகாசாவின் தலை வலி பறந்து போயிற்று.

பின்பு ஒரு சமயம் அவ்விருவரும் சேர்ந்து கான்பூர் நகரிலே கணேச சங்கரர் என்பவரைப் பார்க்கப்போயினர். கணேசர் ஒரு பெரிய எழுத்தாளர்; பத்திரிகைக்காரருமாவர். அன்பர்களைக் கண்டதும், அவர்களுக்குத் தேநீர் கொணர அவர் உள்ளே சென்றார்.

அவரது மேஜையின்மீது புத்தகங்களும் பத்திரிகைளும் தாறுமாருய்க்கிடந்தன. அவற்றின் மீது தூசியும் படிந்திருந்தது. கணேசர் திரும்பி வருவதற்குள் ஜவாஹர் அப்புத்தகங்களையும் பத்திரிகைகளையும் ஒழுங்காக அடுக்கி வைத்தார்; தூசி தும்பையும் போக்கிச் சுத்தஞ்செய்தார். திரும்பி வந்த கணேசர், அது கண்டு வியப்புக் கொண்டார்.

1930-ஆம் ஆண்டு பம்பாய் நகரின் தொண்டர் படையைக் கலைக்க நேர்ந்தது. அது கண்டு கோபங்கொண்ட தொண்டர்களோ, தலைவர் நரிமன் என்பவரது மோட்டார் வண்டியை நிறுத்தி, அவரைத் தாக்க முயன்ருர்கள். நரிமனுடன் வண்டிக்குள்ளே வீற்றிருந்த ஜவாஹர், அது கண்டு எங்ஙனம் சும்மா இருப்பர்!

நான்கு பக்கமும் கற்கள் வந்து விழுகின்றன. அப்போது தமது சட்டையை முழங்கை வரையில் உயர்த்திக்கொண்டு ஜவாஹர் கீழே குதித்தார்; சூழ்ந்திருந்த தொண்டர்களை நோக்கி ஒரு கர்ஜனை புரிந்தார். அவருக்கு ஏதேனும் தீமை நேருமோ என்று நரிமன் நடுங்கி நிற்க, அத்தொண்டர் அனைவரும் மாயமாய் மறைந்துவிட்டனர்.

இலங்கைக்கு ஜவாஹர் விஜயஞ் செய்திருந்த போது கண்டி நகரிலே தங்கியிருந்தார். ஒரு நாள் அன்பர்களுடன் இரவு 1-30 மணி வரை பேசிக்கொண்டிருக்கையில், அவர்களுக்குத் தூக்கம் வந்து கண்ணைச் சுழற்றியது. அதைப் பார்த்ததும் ஜவாஹர் எழுந்து, தமது அறைக்குள் சென்று, முகம் கழுவி, வேறு உடை உடுத்து வெளியே போக ஆயத்தமானர்.

'இரவு மணி இரண்டாகிறதே!' என்று அன்பர் உரைத்தனர். 'மணி இரண்டு ஆனல், என்ன?

எத்தனை நேரமானாலும் வந்து பார்ப்பதாக ஓர் ஆசிரிய அன்பருக்கு வாக்களித்தேன். அதில் தவறக்கூடாது அல்லவா?' என்று அவர் பதில் அளித்தார். அன்பர் என்ன சொல்லுவர்!

தம் அருமைக் காதலியாரான கமலாதேவியாரை ஜவாஹர் இழந்து நின்ற சமயத்தில், தோழரொருவரைக் காணப் போனார். அத்தொழரோ, அத்துக்க நிகழ்ச்சிக்குப் பின் அப்போதுதான் ஜவாஹரைப் பார்ப்பதால், துக்கம் விசாரிக்கத் தொடங்கினர்.

உடனே, "அது கிடக்கட்டும்! நாளைய தினம் நகரிலே காங்கிரஸ் வேலை இவ்வாறு நடத்தல் வேண்டும். அதனை அறிவிக்கவே வந்தேன். எல்லாம் இனிது நடந்தாக வேண்டும். இதுவே முக்கியம்," என்று பண்டிதர் புகலவே, "என்ன தியாகபுத்தி! என்ன தேசபத்தி!" என்று அந்நண்பருக்கு வியப்பு மேலிட்டது.

இங்கிலாந்திலிருந்து ஆங்கில மந்திரிகள் வந்து அரசியல் விஷயமாக ஒப்பந்தம் பேசினர்கள். ஆரம்பத்தில் அவர்கள் பிடி கொடாமல் பேசினர்கள். பேச்சு வார்த்தை முறிந்துவிட்டது. தலைவர்களுட்பலரும் வாட்டத்துடன் தத்தம் இருப்பிடம் ஏகினர்.

அச்சமயம் அமெரிக்காவின் பத்திரிகைப் பிரதிநிதியொருவர் நம் பண்டிதரைக் கண்டு பேசப் போனார். "பண்டிதர் யோகம் செய்கிறார். சற்றே காத்திருக்க வேண்டும்," என்று வாயிற்சேகவன் செப்பினன். அப்பிரதிநிதி உள்ளே எட்டிப்பார்க்கையில், தலை கீழும் கால் மேலுமாக யோகாசனத்தில் இருந்தார் ஜவாஹர்லால்.

1947-ஆம் வருஷம், ஆகஸ்டு மாதம், மூன்ருவது வாரம்—பஞ்சாபிலும் வங்காளத்திலும் முஸ்லீம் லீகர்கள் கொள்ளையும் கொலையும் நடத்திக் கொக்கரிக்கின்ருர்கள். இலட்சக் கணக்கில் ஹிந்துக்கள் பஞ்சாபை விட்டு, வீடு வாயில்களைத் துறந்து, 'உயிர் தப்பினுல் போதும்!' என்று ஓடி வருகிருர்கள்.

அத்தருவாயில் ஸ்ரீ பிரகாசாவும் ஜவாஹரும் ஓர் அறையிலே தனிமையில் பேசியிருந்தனர். அப்போது, "என்ன சுயராஜ்யம் இது! நல்ல பாகிஸ்தானம்!" என்று பிரகாசா கூறினுர் கண்ணீரும் கம்பலையுமாக. அதற்கு ஜவாஹர் என்ன பதில் சொன்னுர்?

"நல்லது! இந்த இரத்தக் களரி கண்டு நாமும் ஆழ்ந்து அழிவதா, அல்லது ஆண்மையுடன் கிளம்பி எழுவதா? அழியாது எழுவதே ஆண்மை! அதுவே ஆன்ற அறிவு!" என்றே பண்டிதர் பதில் கூறினுர்.

முன்னம் ஒரு சமயம் சென்னைக்கு ஜவாஹர் விஜயஞ்செய்தார். இலட்சக்கணக்கில் நகர மக்கள் கூடி, ஊர் வலமாக அவரை அழைத்துச் சென்ருர்கள். மௌண்டு ரோடு என்னும் இடத்தில் ஜனக் கூட்டம் தாங்கவில்லை. கூட்டத்தை ஒழுங்கு படுத்தி வந்த போலீஸ்காரர் திணறிப்போயினர்.

அது கண்டதும், வாகனத்தில் வீற்றிருந்த ஜவாஹர் திடீரென்று கீழே துள்ளிக்குதித்து, ஜனத் திரளின் மத்தியிலே பாய்ந்த சமயம், 'வாகனத்தின்மீது ஜவாஹரைக் காணுமே!' என்று தூர இருந்த மக்கள் முன்னே நெருக்கிக் கொண்டு வந்தார்கள். கூட்டத்தினிடையே சிக்கி

அவர் திண்டாடுவார் என்று போலீஸார் எண்ணி னர்.

கூட்டத்தினிடையே அவர் பாய்ந்ததுதான் தாமதம்! பின்னே வரும் வாகனத்துக்கு வழிவிடு மாறும், ஒருவரையொருவர் நெருக்காமல் அமைதி யாக நடந்து வருமாறும் ஜனங்களுக்குச் சொன் னர். மக்களும் அவரது வார்த்தையைத் தலைமீது தாங்கி நடந்தார்கள். அப்போது, போலீஸாருக்கு ஆச்சரியம் பிறந்தது!

பஞ்சாபிலிருந்து நம்மவர் பலர் ஓடி வந்து டில்லியிலே தெருத்தோறும் குழந்தை குட்டிகளு டன் ஏங்கிக் கிடந்தனர். வெயிலுக்கும் வாடைக் கும் ஒதுங்க அவர்களுக்கு இடங்கிடைக்கவில்லை. அது கண்ட ஜவாஹர், உடனே இரண்டு மூன்று குடும்பங்களுக்குத் தமது மாளிகையில் இடங் கொடுத்து ஆதரித்தார். அதன்மேல் டில்லி மக்க ளுட்பலரும் தத்தம் வீடுகளில் அக்குடும்பங்களுக்கு இடங்கொடுக்க முன் வந்தனர். ஒரு சமயம் டில்லி நகர வாசிகள் ரேஷன் கடைகளிலே ஒருவர் பின் ஒருவர் வரிசையாய் நின்று உணவுப்பொருள் வாங் காமல், ஒரே கூட்டமாய் நின்று அவதியுற்றனர். ஜவாஹர் அச்சமயம் தமது ரேஷன் கார்டுடன் சென்று மக்களை வரிசையாக நிறுத்தித் தாமும் நின்று உணவுப்பொருள் வாங்கி வந்தார்.

நிஜாம் ராஜ்யத்திலே ரஜாக்கர் என்பார் முன்னம் தலைவிரி கோலங்கொண்டு, இந்தியாவுக்கு விரோதமாய்க் குழப்பம் செய்து வந்தனர். 'இது ஆகாது; முடிவில் நமக்கே தீம்பாய் முடியும்,' என்று ஷோபுல்லாகான் என்னும் ஒரு பத்திராசிரியர் புத்தி கூறி வந்தார். தம் இனத்தார், மதத்

தார் என்று கூட எண்ணிப் பாராமல், அவரை ரஜாக்கர் கொன்றுவிட்டனர். அவ்வீரமகனுரின் இளமனைவியும் வயது சென்ற தாயும் வருந்தி நின்றது கொஞ்சமன்று. அவ்விருவருக்கும் ஆறுதல் கூறி ஒரு செய்தி அனுப்பியதுடன் ஜவாஹர் நிற்கவில்லை. பின்னர் அந்த ராஜ்யத்துக்குச் சென்ற போது, அவ்விருவரையும் அவர் நேரில் சென்று பார்த்துத் தேறுதலும் கூறினர்.

இத்தகைய சிறப்பியல்புகள் ஜவாஹரைக் குறித்து ஆயிரம் வரையக்கூடும்.

# 27. முடிவுரை

பூவுலகிலே தோன்றி மறையும் மானிடருக்கு ஒரு கணக்கு உண்டோ? அவர்களுள் தமது பெயரையும் புகழையும் நிலைநாட்டுவார் ஒரு சிலரே யாவர். 'காதவழி பெயரில்லான் கழுதைக்குச் சமானம்,' என்பர். பாரனைத்தும் புகழ் பரப்புபவரே பெரிய மனிதராவர்.

ஒருவராய் உலகு ஏத்த நின்றவர் கடவுளே. அவ்விதம் உலகெலாம் ஏத்தும் வண்ணம் விளங்குகிறார் ஜவாஹர். தாம் பிறந்த குலம், தேசம் இவற்றினுக்குப் புகழ் தேடிவைப்பவர், கைவிரலால் எண்ணும் எண்ணிக்கையில் அடங்குவர். அத்தகையவருள் ஒருவர் நமது தேசத்தின் முதன்மந்திரியார்!

உலகை வாட்டி வரும் நிகழ்ச்சிகளில் அவரைப் போல நுண்ணறிவும் முன்னறிவும் படைத்தவர் எத்தனை பேர்? பன்முறை அவரைச் சிறைக்குள் தள்ளிய இங்கிலாந்து தேசமும் இச்சமயம் அவரது

உயரிய வாய்மொழியை அறிய எதிர் நோக்கி நிற்கின்றது!

உலகத் தேசங்களிலே பணம் மிகப் படைத்த அமெரிக்காத் தேசம், ஏனைய தேசங்களை விலைக்கு வாங்க முடியுமானாலும், ஜவாஹரின் நல்வார்த்தையை நாடி நிற்கின்றது. இவ்வளவுக்கும் அவரது பேராண்மையும் பெருமதியுமே காரணமாம்.

உலகத்துப் பேரறிஞருள் ஒருவராகிய நம் ராஜாஜியோ மகாத்துமாவையும் ஜவாஹரையும் இராம லட்சுமணர் என்கிறார். உவமை கூறுவதில் ராஜாஜிக்கு நிகர் ராஜாஜியே. "காதலி தன் காதலனை நேசிப்பது போல, உலகெலாம் ஜவாஹரைக் காதலிக்கிறது," என்று ராஜாஜி கூறுகிறார்.

"சென்ற முப்பதாண்டின் பாரத தேச சரித்திரம் பண்டித ஜவாஹரின் வாழ்க்கையுடன் பிணைந்து நிற்கிறது. சுதந்தரப் போரிலே முன் அணியில் மார்தட்டி நின்றவர் ஜவாஹரே. நான்கு முறை அவர் காங்கிரஸ் மகா சபையின் தலைமை தாங்கினார். அவருக்கு நிகர் யார்?" என்கிறார் நம் ஜனாதிபதி ராஜேந்திர பாபு.

"மகாத்துமா காந்திக்கு அடுத்தபடி நேருவையே அயர்லாந்து போற்றுகிறது. சுதந்தர இந்தியாவை நடத்திச் செல்ல நேரு வாய்த்திருப்பது கேட்டு நாங்கள் மனமகிழ்கிறோம்!" என்று அயர்லாந்துக்குச் சுதந்தரம் தேடித்தந்த வீராதி வீரர் டிவேலரா விளம்புகிறார்.

"ஜவாஹர் எனது அரசியல் வாரிசு. நான் உயிருடன் இருக்கையில் அவர் என்னுடன் மாறுபடலாம். நான் மறைந்த பின்போ, என்னைப்

போலவே அவர் பேசுவார்; நடப்பார்,'' என்று மகாத்துமா காந்தி மொழிந்தார். அவ்வாசகத்தின் உண்மையை இப்போது நாம் கண்கூடாகக் காண்கிறோம்!

அமெரிக்காத் தேசத்தின் பேர் பெற்ற பத்திரிகை நிருபரும் உலக மகா புருஷரையெல்லாம் நேரிற்கண்டு பேசியவருமான லூயி பிஷர் என்பாரோ, 'மனிதரிலே மன்னவர் ஜவாஹர்!' என்று பறை சாற்றுகிறார்.

"முதன் மந்திரியார் நேருவே பாரத பூமியின் பெரும்புதல்வர்; ஆசியாத் தேசங்களின் அரிய ஒளி போன்றவர். அவரது வாக்கை மதித்து நடந்தால், உலகிலே அமைதி நிலவும்; நலம் பெருகும்,'' என்கிறார் துருக்கித் தேசத்தின் தலைவர்.

"உலகிலே நேசமும் கூட்டுறவும் நிலவ வேண்டும்; இரண்டுமின்றி உலகம் தத்தளிக்கின்றது. இந்தியாவோ, உலகத்துக்கு ஓர் அச்சாணி போன்ற நிலையில் உள்ளது. உலக நலத்தையும் இந்தியாவின் உயர்வையும் நாடி, நேரு நெடுநாள் வாழ்ந்திருக்க வேண்டுமென ஆண்டவனை வாழ்த்துவேன்!'' என்று இந்தியா மந்திரியாராயிருந்த லார்டு பெதிக்கு லாரன்ஸ் என்பார் இசைக்கிறார்.

"நான் பற்பல இந்தியத் தலைவர்களையும் கண்டு பேசினேன். ஜவாஹரின் பேச்சைக் கேட்டதும் சொக்கிப் போனேன்!'' என்று லார்டு லின்லித்கோ என்பார் வாய் விட்டுரைக்க நேர்ந்தது.

"பண்டிதருடன் ஒரு மணி நேரம் நான் பேசி நின்ற காலையில், உலக விஷயம் அனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல உணர்ந்துகொண்

டேன். ஆயுள் அளவும் படித்தாலும் அவ்வளவு விஷயத்தை நான் உணர்ந்திருக்க முடியாது," என்று பாட்டியாலாவின் மாஜி மகாராஜா பேசியுள்ளார்.

அவ்வாறு பண்டிதர் பெற்றுள்ள புகழ் மாலை ஏட்டில் அடங்காது! அவரது சரிதத்தை நாம் அறிவதன் பயன் யாது? பாரத தேசம் பல வகையிலும் முன்னேற ஆண் பெண் குழந்தை அடங்கலும் முயலவேண்டுமென அவர் விரும்புகிறார். அவ்விருப்பத்தை ஈடேற்றுவதே நமது கடமையாம்.
ஹர் வாழ்க !

## எமது புதிய வெளியீடுகள்

| | | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|---|
| 1. | திருக்குறள் : மூலமும் ஆங்கில மொழி பெயர்ப்பும் (அழகிய கையடக்கப் பதிப்பு) | .... | 1 | 8 | 0 |
| 2. | திருக்குறள் : தெள்ளிய பதவுரை, கருத்துரை, அருஞ்சொல் அகர வரிசைகளுடன், சிறுவரும் எளிதிற் படித்து உணரத்தக்க அமைவுடையது | .... | 4 | 0 | 0 |
| 3. | ஷை உயர்ந்த பதிப்பு | .... | 5 | 0 | 0 |
| 4. | முகையூர் நீதிபதி | .... | 3 | 0 | 0 |
| 5. | மறைந்த நாகரிகங்கள் | .... | 0 | 14 | 0 |
| 6. | திருவள்ளுவர் | .... | 0 | 8 | 0 |
| 7. | பெண்களும் சமூகமும் | .... | 0 | 12 | 0 |
| 8. | அகத்தியர் | .... | 0 | 8 | 0 |
| 9. | ஆதி மனிதன் (Pre-historic man) | .... | 0 | 8 | 0 |
| 10. | நமது தாய் மொழி | .... | 0 | 8 | 0 |
| 11. | மனிதன் எப்படித் தோன்றினன் | .... | 0 | 8 | 0 |
| 12. | நூலகங்கள் | .... | 0 | 8 | 0 |
| 13. | ஆதி உயிர்கள் | .... | 0 | 10 | 0 |
| 14. | தென்னலிராமன் | .... | 1 | 4 | 0 |
| 15. | கவியரசியார் | .... | 1 | 0 | 0 |
| 16. | நீதிநெறி விளக்கம் | .... | 0 | 10 | 0 |
| 17. | பாரத நாட்டுப் பஞ்சரத்தினங்கள் | .... | 0 | 10 | 0 |
| 18. | செஸ்டர் பீல்டு—கடிதங்கள் | .... | 0 | 14 | 0 |
| 19. | ஹோரெஸ் வால்போல் கடிதங்கள் | .... | 0 | 14 | 0 |
| 20. | டேவிட் லிவிங்ஸ்டன் | .... | 0 | 10 | 0 |
| 21. | பாஸனின் இரட்டை நாடகங்கள் | .... | 1 | 8 | 0 |
| | ,, (ஆராய்ச்சியுடன் கூடியது) | .... | 2 | 8 | 0 |
| 22 | சமதர்ம விளக்கம் (A Book on Socialism) | .... | 2 | 4 | 0 |
| 23. | இனியவை நாற்பது | .... | 0 | 12 | 0 |
| 24. | அற்புத உலகம் | .... | 1 | 8 | 0 |
| 25. | காந்திப் பெரியார் | .... | 0 | 8 | 0 |
| 26. | ஜீவஜந்துக்களின் பழக்க ஒழுக்கங்கள் | .... | 0 | 12 | 0 |
| 27. | வாழ்க்கையும், மனோதத்துவமும் | .... | 0 | 8 | 0 |
| 28. | ஊழ்கடந்த மாவீரர் | .... | 1 | 0 | 0 |
| 29. | விஜயலட்சுமி பண்டிதையார் | .... | 0 | 8 | 0 |
| 30. | தமிழர் சரித்திரம் | .... | 3 | 0 | 0 |
| 31. | சர்தார் படேல் | .... | 1 | 0 | 0 |
| 32. | வாழ்க்கைப் பயிற்சி | .... | 1 | 0 | 0 |